

ஸ்ரீலஸ்ரீ இளவரசு சுவாமிகள் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் துவக்கப்பள்ளியில்
மின்சார விளக்குகள் ஏற்றி வைத்தல்



ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ இளவரசு சுவாமிகள் காலேஜ் பிரின்சிபாலுடன்
புதுக்கட்டிடத்தைச் சுற்றிப் பார்வையிடல்

ஸ்ரீவைகுண்டம், குமரகுருபர சுவாமிகள் கல்வி நிலையங்களின்
"புரவலர் தின விழாவில்"



குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர்
ஆண்டறிக்கை வாசித்தல்



திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் ஸ்ரீலஸ்ரீ இளவரசு சுவாமிகள் அவர்கள்
அருளுரை வழங்கல்

உ

# வாழ்க! வாழ்க!

திருவிளங்கச் சிவநெறியின் திறம்விளங்கச்
செழுந்தமிழின் சீர்த்தி ஓங்க
வருந்துணையே! திருத்தொண்டர் மணிவிளக்கே!
வாழ்முதலே! வளமார் காசிப்
பெருநிதியே! அருள்வழங்கு பெருமலையே!
பேரலைகள் கொழிக்கும் செந்தில்
முருகனருள் முழுதுடையாய்! குமரகுரு
பரமுனிவா! போற்றி! போற்றி! 1

குருபரனார் திருவடியே குறைவறுக்கும்
நிறைசெல்வம் ஆகக் கொண்டோய்!
குருபரனார் திருப்பெயரால் பலகலையும்
குலவுமெழில் நிலையம் கண்டோய்!
அருட்கொடையாப் பலஇலக்கம் அருள்செய்தோய்!
அறவடிவோய்! அடியேம் வாழ
அருட்குருவாய் எழுந்தருளும் அருணந்தி
மாமுனிவா! போற்றி! போற்றி! 2

அருணந்தி எந்தையருள் ஆணைவழி
அமிழ்தமெனப் படிப்போர் பேணும்
கருத்துடையாய்! கதைபலவும் சுவைபெருகு
கட்டுரையும் தாங்கி நிற்பாய்!
குருபரனார் அருள்நூலின் பொருள்வளமும்
கொண்டுலவி வருவாய்! நாளும்
வருபுகழால் "குருபரனே!" வண்தமிழ்போல்
வளர்ந்தோங்கி வாழ்க! வாழ்க! 3

அன்பன்,
பொ. முத்தரசு.

# உள்ளுறை

வரிசை எண். பொருள். பக்கம்.

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை





மலர் 14 | சுபகிருது-ஆு தைத் திங்கள் 1-ம்உ [14-1-63] | இதழ் 1


## "குமரகுருபரன்"
## பதினான்காம் ஆண்டு மலர்

### தோற்றுவாய்

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணியவர். —குமரகுருபரர்.

'குமர குருபரன்' பதின்மூன்று ஆண்டுகள் சீரோடும் சிறப்போடும் வளர்ந்து, இன்று பதினான்காம் ஆண்டினை எய்துகின்றான். கண்ணைக் கவரும் வனப்பும், கருத்தைக் கவரும் அறிவும் நிரம்பி அருளொளியோடு இலங்கித் தோன்றும் அவன் முகம் எல்லோரையும் எளிதில் ஈர்த்துவிடும் என்பதில் ஐயமும் உண்டோ? நாட்பொழுதலர்ந்த செந்தாமரையின் நலத்தோடு, அவன் இவ்வாண்டுப் பொங்கல் நாளில் வாசகர்களுக்கு மகிழ்ச்சியூட்ட வருகின்றான் என்று சொல்வதில் பெருமிதமும் உவகையும் ஒருங்கே அடைகின்றேன்.

"குமரகுருபரன்", திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திருக்கண் நோக்கப் பேருதவியால் தோன்றி, வளர்ந்து, எல்லா நலமும் பெற்றுத் திகழ்வதோடு, சிறந்ததோர் தமிழ்த் தொண்டும் அறத்தொண்டும் ஆற்றி வருவது தமிழுலகும் சைவ உலகும் எண்ணி எண்ணி இன்புறதற் குரியதாம்.

ஆதி குமரகுருபர சுவாமிகள் திருநெறியாம் சைவத்தையும், தீந்தமிழையும் நாடெங்கும் பரவச் செய்ய அருளிச் செய்துள்ள செந்தமிழ்ப் பனுவல்கள் பல. அவை பாலொடு தேன்கலந்தாற் போல் சுவை நிரம்பியவை; உறுதியான தமிழ்ப்பற்றையும், சிவநெறிப் பண்பையும் இனிது ஊட்டுபவை; பாண்டிய நாட்டின் வளத்தையும், சோழ நாட்டின் செழுமையையும் எடுத்துரைப்பவை; நீலத்திரைக் கடல் ஓரத்திலே நின்றருள் செய்யும் நெடியவேள் மாண்பினையும், தில்லைக்கூத்தன் பெரும் புகழையும், காசிப்பதிவாழும் எம்பெருமான் பேரருளையும், இன்னும் இவை போன்ற பற்பல அரிய செய்திகளையும் அழகுற அறிவித்து அன்பினைப் பெருக்கும் தன்மை வாய்ந்தவை; அருமையில் எளிய அழகும், ஏறு போன்ற பீடு நடையும், ஆன்ற பொருளும் நிறைந்தவை; எழுத்து முதலாம் ஐந்திலக்கணமும் தோய்ந்த பழுத்த தமிழ்ப் புலமையும் பாலிப்பவை. எத்தகைய கற்பனைக்கும் இணையற்ற ஊற்றுகத் திகழும் இக்கருவூலத்தின் பயன் எல்லாத் திசைகளிலும் பரவி, மக்களுக்கு விழிப்பூட்டிப் பயன் நல்க வேண்டு மென்று திருவுளங் கொண்டும் ஸ்ரீ காசி மடத்தின் மூல முதல்வர் திருப்பெயரால் "குமரகுருபரன்" திங்கள் இதழ் தோன்றி நிலவ அருள்செய்தும் அறக் கொடை நல்கி அருள் பாலித்து வரும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் பொன்னுர் திருவடிகளில் பதினைன் காவது ஆண்டு மலரை அன்புக் காணிக்கையாகச் சமர்ப்பித்து மகிழ்கின்றேன்.

வரையாது வழங்கும் வள்ளலாகவும், தனக்கென வாழாப் பிறர்க் குரியாளராகிய பெருந்தகை யாகவும், ஈத்துவக்கும் இன்பமே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்ட கருவிலே திருவுடைய துறவின் மணி முடியாகவும், "குமரகுருபரனை" வளர்க்கும் அம்மையப்பராகவும் தமிழையும் சைவத்தையும் பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து

பேணி வளர்த்துப் பரப்பும் பேரன்பின் நிலைக்களமாகவும் இலங்கி, அடியேனையும் இப்புண்ணியப் பெருந் தொண்டில் ஈடுபடுத்தித் தடுத்தாட் கொண்டருளும் தவப் பெருஞ்செல்வர், சிவ சிவ ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் பொற்பாத கமலங்களில் தெண்டனிட்டு வணங்கி, வழிவழித் தொண்டு பூண் டொழுகும் பேற்றினை வழங்கியருளும் கருணைக்கு மன மொழி மெய் களாலாய வணக்கத்தையும் நன்றியையும் பணிவுடன் விண்ணப்பித் துக்கொள்கிறேன். அவர்கள் ஆணைவழி நின்றொழுகிக் "குமரகுருபரன்' வளர்ச்சிக்கு வேண்டிய ஆக்கமும் ஊக்கமும் நிறைந்த பல்வேறு நல்லுரைகளை அருளி வருகின்ற ஸ்ரீ காசி மடம் இளவரசு வித்துவான் **ஸ்ரீலஸ்ரீ முத்துக் குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்** அவர் களுக்கும் என் நன்றியையும் வணக்கத்தையும் பணிவன்புடன் தெரி வித்துக் கொள்கிறேன். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் அன்பும் அருளும் அறிவுரைகளும் ஆற்றுப்படுத்த ஸ்ரீலஸ்ரீ இளவரசு சுவாமிகள் ஊக்கவுரைகள் துணை நிற்க இப்பதினான்காம் ஆண்டில் "குமரகுருபரன்" முன்னிலும் பன்மடங்கு வலிமையும் ஆற்றலும் கொண்டு பொதுநலப் பணிபுரிவான் என்பது திண்ணம்.

ஆதி குமரகுருபர சுவாமிகள் அருளியுள்ள நூல்களுள் சிதம்பரச் செய்யுட் கோவைக்குப் பொருள் விளக்கக் கட்டுரைகள் எழுதி உயர்ந்த பணியாற்றி வருபவர் முதுபெரும்புலவர் திருவெண்காடு ஸ்ரீ சிவஞானத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ஆவார்கள். அவர்கள் கட்டுரைகள் வழக்கம்போல் இவ்வாண்டிலும் தொடர்ந்து வெளி வரும். **Hymns of Saivite Saints** என்ற நூலில் உள்ள திருமுறைப் பாடல்களும் ஆங்கில மொழி பெயர்ப்பும் தொடர்ந்து வெளியிடப் பெறும். தேவகோட்டைச் சித்தாந்தப் புலவர் மாமணி பாலகவி, வயிநாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள் நீதிநெறி விளக்க உரைநடையும் அதனுடன் அதற்குரிய ஆங்கில மொழி பெயர்ப்பும் வெளிவரும். மேலும் சமய, இலக்கிய, செப்புப்பட்டய ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதிவரும், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர், சிவநெறிச் செல்வர் திரு. கே. எம். வேங்கடராமய்யா அவர்கள், சென்னை 'திருப்புகழமிர்தம்' ஆசிரியர் திருமுருக கிருபானந்த வாரி அவர்கள், 'கலைமகள்' ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள், மைலாப்பூர் ஸ்ரீ இராம

கிருஷ்ண மடம் "ஸ்ரீ இராம கிருஷ்ண விஜயம்" பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீலஸ்ரீ பரமாத்மாநந்த சுவாமிகள் அவர்கள், ஓய்வு பெற்ற மாவட்டக் கல்வித்துறைத் தலைவர். திரு. சச்சிதானந்தம்பிள்ளை அவர்கள், அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர் திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள், பனைசைச் செந்தமிழ்க் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள், காசி இந்துப்பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள் செந்தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள், தென்காசி வழக்கறிஞர் திரு. A. C. சண்முகநயினார் அவர்கள் இன்னும் பல பேரறிஞர்களும் எழுதும் எழுத்தோவியங்கள் "குமரகுருபரனில்" இடம் பெறுகின்றன.

நூலாய்தல், நூற்பொருள் நுணுக்கம் காணல், ஐயம் அகற்றல் ஆகிய பல்வேறு துறைகளில் புதுப்புதுக் கருத்துக்கள் அமைத்து, நுண்மாண் நுழைபுலம் செறிந்த கட்டுரைகளையும், கவிதைகளையும், இசைப் பாடல்களையும் மக்கள் நலனும், தமிழார்வமும், சமயப்பற்றும் அடிப்படையாகக் கொண்டு எழுதிவரும் எல்லா அன்பர்க்கும் எம் நன்றி என்றென்றும் உரியதாகும். "குமரகுருபரன்" நல்ல முறையில் திங்கள் தோறும் வெளிவருதற்கு எப்பொழுதும் உதவிவரும் ஸ்ரீவைகுண்டம் அருள்நந்திநகர், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆர்ட்ஸ் காலேஜ், தலைமைத் தமிழ் விரிவுரையாளர் திரு. பொ. முத்தரசு, எம். ஏ. பி. டி. அவர்களுக்கும், "குமரகுருபரன்" வளர்ச்சிக்காக அயராது உழைக்கும் ஆசிரியர் குழுவினர்க்கும், உரிய காலத்தில் அச்சுப் பணியை நிறைவு செய்து உதவும் குமரகுருபரன் அச்சகப்பணியாளர்களுக்கும், இதழ்களைக் குறித்த காலத்தில் அனுப்பி உதவிவரும் கலைக் கோயில் சிப்பந்திகளுக்கும் நம் நன்றி உரியது.

திருச்செந்திலாண்டவன் துணை முன்னிற்க
தமிழும் சைவமும் தழைத்தினி தோங்குக
குமரகுருபரன் வளர்க

ஸ்ரீவைகுண்டம்,
14-1-1963.

இங்ஙனம்,
T. M. குமரகுருபரன் பிள்ளை, B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# பொங்கல் வாழ்த்து

திரு. பொ. முத்தரசு, அவர்கள் M. A., B. T.,
தலைமைத் தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கல்லூரி,
அருள்நந்தி நகர்-ஸ்ரீவைகுண்டம்.

( கலிப்பா )

— தரவு —

உழுபவரே உலகத்தார்க் காணியென உரைத்தருளும்
செழுமறையின் திறப்பாட்டைத் தேர்ந்துணர்ந்து வழிவழியாய்
விழுமியதோர் விழாவாக விழைந்தெடுத்துத் தைம்முதல்நாள்
கொழுமுகத்தின் பயன்திரட்டிக் கொடுவந்து பொங்கலிட்டுத்
தொழுதிறைஞ்சும் திருநாளில் தோன்றியெழும் உணர்ச்சியெலாம்
வழுவில்லா மறம்விளங்கப் படைப்புமுதல் வளர்ந்தோங்கிப்
பழுதடையா அறநெறியில் பயின்றதமிழ்ப் பண்புடையீர்
எழுதுதற்கும் இயம்புதற்கும் எளிதாமோ? எம்மவரே!

— தாழிசை —

பனிதுடைத்துத் துனிதவிர்த்துப் பயன்மிகுத்துப் பகுத்துண்ணக்
கனிபலவும் குலைக்காயும் கரும்பினமும் மிகப்படைத்துத்
தனிமுதல்வன் அடிபரவித் தமிழ்பாடி மனம்நெகிழ
இனிமைமுதல் சுவைபெருக எழும்பொங்கல் இனிதார்க!

ஒளிபொங்க இருள்மடிய உவந்துவரும் பொங்கல்நாள்
களிபொங்க விரைந்தெழுந்து கடமைதனைக் கருத்திருத்தி
அளிபொங்க அனைத்துயிரும் அகமகிழத் துணைபுரிந்து
தெளிபொங்கு செழுந்தமிழின் திறம்பாடிப் பணிசெய்க!

தைபிறந்தால் வழிபிறக்கும் தயங்காதீர் எனவுரைக்கும்
பொய்யுரையாப் பழமொழியின் பொருள்வாய்மை உணர்த்திடவே
எய்ப்பெதுவும் இல்லாமல் எழுமனத்தின் உறுதியுடன்
உய்யுநெறி அறவாழ்வே எனக்காட்டி உயர்ந்தொளிர்க!

— தனிச்சொல் —

எனவுயர்ந்து,

— சுரிதகம் —

யாரொடும் நட்பே யாம்விழை வதுஎனும்
ஏரொளிர் இந்தியர் இயல்பினால் எங்கணும்
போரும் பகையும் புறங்கொடுத் தோடச்
சீரும் வாழ்வும் சிறக்கத்
திருவொடும் விறலொடும் திகழ்க பொங்கலே.

# சிதம்பரச் செய்யுட் கோவை

முதுபெரும் புலவர்

**ஸ்ரீமத். சிவஞானத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

திருவெண்காடு.

[ கட்டுரை 64 ]

### 1. திருச் சிற்றம்பலத்தில் உறைவோனே கேள்

தில்லையின் வளம் பலபடியாக இச் சிதம்பரச் செய்யுட் கோவையுட் சொல்லி வருதலை ஆங்காங்கு இக்கட்டுரையைக் கற்று மகிழ்வோர் நினைவில் வைத்திருப்பர். இக் கலிப்பாவில், அத் திருநகர் வளத்தை ஆசிரியர் குறித்தவாறும் அறிவிற்கு விருந்தே யாகும்.

கடலில் மேகக் கூட்டம் நீரை முகந்துண்பது பலர்க்கும் தெரிந்ததே. நிலத்திற் சாவியாகாமல் இருக்கவேண்டித் தான் கடலில் ஆவியாகத் தோன்றி மழையாகப் பெய்கின்றது. அதற்குக் கதிரவன், வெயில், காலம் முதலியன கருவி. சோலையில் வண்டின் கூட்டம் நெருங்கி மலர்த்தேனை முகந்துண்ணும் வளம் தில்லையில் உண்டு. வண்டுகள் மலரில் தங்கித் தேனை உண்ணும் முன்பு ஒலி செய்யும். கடலில் உள்ள சூல் முகத்த சுரிசங்குகளும் நிரைத்து ஆர்க்கின்றன. இரண்டும் ஓசையொப்புமை மட்டும் குறித்து நின்றன. வண்டுக்கு மேகம் உவமை, (சங்கு அன்று). மழைக்கூட்டம் வானில் இருப்பவை ஆதலின், 'வான் முகத்த மழைக் குலங்கள்' எனப்பட்டன. கடலில் புனலை வாய் மடுத்தது மேகம். சோலை மலரில் தேனை வாய் மடுத்தது வண்டு. வண்டின் கூட்டம் மலர்க் காட்டில்

இருக்கும் ஆதலின், 'கான் முகத்த மதுகரத்தின் குலம்' என்றார். கடிமலர் நறுமணப் பூக்கள். தில்லைப் பொழில் வளம் இதிற் சுருங்கச் சொல்லி விளங்க விரித்து உணரச் செய்தார் ஆசிரியர். நீர்வளம், நிலவளம் முதலிய பலவளமும் கொள்ளவைத்த திறம் போற்றற் பாலது.

"தூன்முகத்த சுரிமுகங்கள் நிரைத்தார்ப்பத் தொடுகடல்வாய்
வான்முகத்த மழைக்குலங்கள் மறிபுனல்வாய் மடுத்தென்னக்
கான்முகத்த மதுகரத்தின் குலமீண்டிக் கடிமலர்வாய்த்
தேன்முகக்கும் பொழிற்றில்லைத் திருச்சிற்றம்பலத் துறைவோய்!"

## 2. திருக்கூத்தாடும் அறவோனே கேள்

நிலையாமையில் மிக்க விரைவும் மிக்க தாமதமும் அவ் விரண்டும் அல்லாமல் இடைப்பட்ட நிலைவேறுபாடும் உண்டு. விரைந்தழிவது, பாணித்து அழிவது, விரைவும் பாணிப்பும் இன்றி அழிவது என்று முத்திறமே கொள்ளலாம். நடுவான திறத்திலும் விரைவும் பாணிப்பும் உண்டு. விரைந்து அழிவன வற்றுள் நீர்க்குமிழியும் ஒன்று. மின்னலினும் விரைவுடையது அது. 'நீரிற் குமிழி இளமை' என்பது இவர் திருவாக்கு. விரைந் தழிவதில் விரைந்த நீர்க்குமிழியும் தோற்றொழியும்படி உடம்பு விரைந்தழி கின்றது என்று யாக்கை நிலையாமையின் விரைவு குறித்த ஆசிரியர் திறம் வியக்கத்தக்கது. எவ்வளவு உணர்த்தினும் மாக்கட்கு உயிர் நிலையாது உடல் நிலைக்கும் என்று எண்ணும் பழக்கம் ஒழிந்தபாடில்லை. உயிர் நிலையாது என்ற அச்சம் பெரிய நகர்களிற் பலபல பிணம் நாள்தோறும் பார்ப்பவர்க்குத் தான் தோன்றுகின்றது. ஏனையோர்க்கு உயிருடற் சேர்க்கை என்றும் அழியாது என்பதே எண்ணம்.

"படுமழை மொக்குளின் பல்காலுந் தோன்றிக்
கெடும்இதோர் யாக்கைஎன் றெண்ணித் — தடுமாற்றம்
தீர்ப்பேம்யாம் என்றுணருந் திண்ணறி வாளரை
நேர்ப்பார்யார் நீள்நிலத்தின் மேல்."

என்று நாலடியார் கூறினும் நாலாயிரம் அடியார் கூறினும் நமக்கு உடற்பற்றுத் திடப்பட்டுள்ளதில் நம்மை நேர்ப்பார்

யார்? 'ஓர்யாக்கை இது' என்று இழிவு குறித்து நின்ற ஓர் என்ற அடையை ஓர்வாரே ஓர்வார். ஏனையோர் உடல்நிலை யானது என்று கொண்டு பேரின்பப் பேற்றை மறந்து தீர்வாரே யாவர், ஓர்வாரல்லர். தடுமாற்றம் என்பது பிறவி பலவற்றுள் உயிர்கள் அடையும் தடுமாற்றம். தட்டுமாறல் என்பதின் தோன்றிய சொற்றொடர் இது. "எதுகொல்பொன்னுலகு எனத் தட்டுமாறவும்" (மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ்) என்று ஆசிரியர் திருவாக்கில் வந்தமையும் காண்க. மழைநீர் மொக்குளைப் போலப் பலகாலும் தோன்றிக்கெடும் யாக்கை என்றது நாலடிப் பாட்டு. உடம்பின் இளமைக்கும் நீர்க்குமிழியை ஒப்பிட்டுரைத்தல் யாவரும் அறிந்ததே. 'நேர்ப்பார்யார்' ஒருவரும் இலர். நேர்வார் நேர்ப்பார் இரண்டும் இங்கே வேற்றுமையின்றி நின்றன.

> "ஆர்வ வேர்அரிந் தச்சணந்திபோய்
> வீரன் தாள்நிழல் விளங்க நோற்றபின்
> மாரி மொக்குளின் மாய்ந்து விண்தொழச்
> சோர்வில் கொற்கையான் தோற்றம் நீங்கினுன்"

என்னும் சீவகசிந்தாமணிப் பாடலையும் நினைப்பூட்டி இவ்விடத்துக் குறிப்புரையால், இப்பிரபந்தத்திரட்டைக் கற்போர்க்கு யாக்கை முதலியவற்றின் நிலையாமை யுணர்ச்சி நிலைபெறச் செய்தருளிய தமிழ்த் தெய்வத்திற்கு நன்றி செய்யாவிட்டாலும் வாளா இருப்பது நல்லோர்க்குக் கேளாஞ் சிறப்பாக்கும்.

உடம்பே ஒருவீடாகும். அவ்வீட்டின் வாயிலைத் திறந்து கொண்டு வெளிப்பட்டு, (இறக்கும் வீடும் சிற்றின்ப வீடும் ஆகிய) உடம்பின் கண் (மீண்டும் மீண்டும் வந்து வந்து புகுந்து) புகுந்து வெளிப்பட்டு வெளிப்பட்டுச் செல்லும் துன்பம் இனிஒருமுறையும் வாராதவண்ணம், இறவாவீடும் பேரின்ப வீடும் ஆகிய திருவருள் வெளியில் அழியா நிலையை அடைதல் வேண்டுவதே நல்லுயிர்க்குப் புல்லும் உயர்வு. அது குறித்து நல்ல (வாயிற்) கதவைத் திறந்து வைத்தாற் போன்று நல்ல அருள்வெளியில் நங்கை (சிவகாமித்தா)யாருடன், பக்தியை நல்கும் பரமாநந்த நடனம் பயின்றருளும் தருமசொருபியே கேள்.

"புற்புதமும் தொலேவெய்த நிலேயத்தாப் புலேயுடம்பின்
இற்புதவு திறந்திறவா இன்பவீ டெய்தஒரு
நற்புதவு திறந்தன்ன நறும்பொதுவில் நங்கையுடன்
அற்புதவும் ஆனந்த நடம்பயிலும் அறவோய் கேள்".

## 3. நஞ்சுண்டகண்டன்

நீ எவ்விடங்களிலும் உள்ள எப்பொருள்களேயும் ஒருசேர உண்ண வல்லே. சிவபிரான் பிரமனுக்குயிராய் நின்று படைக்கின்ருன். அவன் செய்யும் படைத்தற் ரெழில் அரன்செயலே. அவ்வாறே ஏனைய வினைமுதல்களும் ஆம். ஆகவே, அழித்தற்ரெழிலுக்கும் அவனே உரியவன். சர்வ சங்காரகர்த்தா (மஹாசங்காரகர்த்தா என்னும் பொருளைக் கொண்டது இதன் முதலடிக்கண் உள்ளது). அத்தகு சீர்த்தியும் முதன்மையும் உடைய சிவபிரான் நஞ்சை எடுத்து உண்பதென்ருல், அதற்கு ஆச்சரியம் அடைதல் கூடுமோ?

'எவ்விடத்தில் எப்பொருளும் ஒருங்குண்ண இருக்கும்நீ
வெவ்விடத்தை எடுத்தமுது செய்ததும்ஓர் வியப்பாமே.' 1

வியப்பு ஆகாது என்னும் எதிர்மறைப் பொருளில் நின்றது ஏகாரம்.

## 4. முப்புரம் எரித்த அப்பன்

எண்ணில்லாத உலகுகளே யெல்லாம் ஒரு நொடிப்பொழுதில் எரித்தொழிக்கவல்ல நீ வானில் தூங்கும் மும்மதிலேயும் நகைத்தெரித்த செய்கையும் ஒரு வீறுடைய செய்கை ஆமோ உனக்கு? உலகடங்க ஊழித்திக் கடவுளே ஏவி எரிக்கச் செய்யும் முதல்வன் நீ. அத்திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுள் என உன்னைப் புகழ்வது ஒரு தனிச் சிறப்புடையதன்று; உலகெலாம் எரிக்கவல்ல தனிச்சிறப்பு உனக்கே உரியது ஆதலின். (வெவ்விடம் - கொடிய நஞ்சு, அமுதுசெயல் - உண்ணல்.)

"எண்பயிலா உலகடங்க ஒருநொடியில் எரித்திடும்நீ
விண்பயிலும் எயில்மூன்றும் எரித்ததும்ஓர் வீருமே. 2

எயில் - மதில், வீறு-பிறிதொன்றற்கில்லாத தனிச்சிறப்பு. மகாசங்கார காலத்தில் 'ப்ரளயாக்நி'யை உருவாக் கொண்டு

அழிக்க வல்லவன். இவன், மூவருள் ஒருவனுன உருத்திரனல் லன். இம்மகா சங்காரகாரணன் சுத்தமாயா புவனுந்தம் சங்க ரிக்கும் (சங்காரகாரணனுகிய) பரமசிவன். அயன்மாலொடுங் கூடக்குணதத்துவத்தின் வைகிப்பிரகிருதி புவனுந்தம் சங்கரிக் கும் குணிருத்திரன் வேறு; இச் சங்காரகாரணன் வேறு. அந்த ருத்திரன் பிரகிருதியின் மேற்பட்ட புவனங்கட்குச் சங்காரகார ணன் அல்லன். பரமசிவன், இலயம், போகம், அதிகாரம் என்னும் அவத்தை மூன்றிலும் முறையே அருவம், அருவுருவம், உருவம் என்னும் திருமேனி மூன்றும் (ஆண்டாண்டுக்) கொண்டு, சத்தன், உத்தியுத்தன், பிரவிருத்தன் எனவும் சிவன், சதா சிவன், மகேசன் எனவும் பெயர் பெற்று நிற்பன். இங்ஙனம் தொழிலால் வேறுபட்டது அன்றிப் பொருளால் வேறுபாடில்லை. பசுவர்க்கத்தில் பிரளயாகலரில் பக்குவம் உடையவன் சீகண்ட ருத்திரன். இவ்வாறு சைவாகமங்களெல்லாம் சாற்றும். மகேசுர மூர்த்தியிறுவாயான திருமேனியே பரமசிவனுக்குச் சுதந்திர வடிவம். ஏனையவை அன்னவை அல்ல. மகாருத்திரன் ஆகிய பரமசிவனைக் குணிருத்திரனுக வைத்தெண்ணும் பரசமயத் தார்க்கு வெவ்வேறுபாடுணர மாட்டாமையால் உருத்திரநிந்தை யாகச்சிவநிந்தை புரியும் இயல்புண்டாயிற்று.

“நம்மவர் அவரே மூவர் என்றே எம்பிரானெடும் எண்ணி விண்ணுண்டுமண்மேல் தேவர் என்றே இறுமாந்து என்ன பாவம் திரித(ர்)வரே”. ‘தேவரில் ஒருவன் என்பர் திருவுருச் சிவனைத், தேவர் மூவராய் நின்ற தோரார்.’ ‘மூவர்உருத் தனதா மூல முதற்கருவை’ ‘மூவர் கோனுய் நின்ற முதல்வன்’ ‘மூவர் அறியாச் சிந்துரச்சேவடியான்’ “முந்திய முதல், நடு, இறுதியும் ஆனுய் மூவரும் அறிகிலர்” ‘அரியாகிக் காப்பான் அயனுய்ப் படைப்பான் அரனுய் அழிப்பவனும் தானே’ ‘வீரன் அயன் அரி ......யாரும் அறியாவகை எங்கள் ஈசர் பரிசுகளே.” என்னுந் திருவாக்குகளை ஓர்ந்துணர்க. சீகண்டருத்திரன், அயன்மால் போலச் சகலருள், கட்டுநீங்கி வீடுற்றவனல்லன்; பிரளாய கலருள் பக்குவம் உடையனுகிக்கட்டு நீங்கி வீடுபெற்ற கடவு ளாவன்; பரமசிவனுக்குரிய எல்லாப் பெயர்களும் வடிவமும் தொழிலும் பெற்றுடையவன்; சைவாகமங்களை உபதேசித்தருளும்

குரவன். அயனுக்கும் மாலுக்கும் மேலானவன்; சைவத்தில் எய்திச் சமயதீட்சை பெற்றவரால் வழிபடப் பெறுங்கடவுள். பெரும்பாலும் இவரைத் தூடிப்பதே பிற சமயங்களில் உள்ள சைவதூடணம். பரமசிவநிலை பரசமயத்தார்க்குப் புலனாகாத ஒரு பரமாதீதநிலை.

## 5. கங்கைச் சடையன்

எல்லா அண்டங்களையும் யுகாந்த வெள்ளக் காலத்தில் மாலையாகத் தொடுத்துப் பூண்டு நிற்கும் நித்தியன் நீ. "தாராக அண்டம் தொடுத்து அணிந்தார்" என்று உன்னையே கூறத் தக்க யாகப்பரணி ஆசிரியர் குளிர்வார். அத்தகு சிறப்புடைய நீ அலை பொருதும் பெருவெள்ளக் கங்கை நீரைத் தலைமிசைத் தரித்தும் ஒரு புகழ் தரும் பெருஞ் செயலோ? உலகெலாம் அழிக்கும் யுகாந்த வெள்ளத்தையும் பரிக்கும் முழு ஆற்றல் உடைய உனக்கு, இக் கங்கை வெள்ளம் சிறு குடத்து நீர்க்குச் சமமான தன்றோ? அதைத் தரித்ததால், உனக்கு முன்பு இல்லாது(புகழ்) புதியதாக என்ன எய்துமோ?

"பெருவெள்ளப் பகிரண்டம் தரித்திடும் நீ பெயர்த்துமலை
பொருவெள்ளப் புனற்கங்கை தரித்ததுமோர் சிறப்பாமே." 3

## 6. பிக்ஷாண்டவன்

எல்லாவுலகும் மாயையின் காரியப்ரபஞ்சம். அந்தப் பிரபஞ்சத்தின் சம்பந்தமே உயிர்கள் எய்தும் சகலாவத்தைக்கு ஏதுவாகும். மாயா காரிய சம்பந்தம் உயிர்கட்கு எய்தாது போனால், கேவலாவத்தை ஒன்றே நிலையாகிச் சுத்தாவத்தையை அடையவழி யில்லையாம். ஆணவ சம்பந்தம் உயிர்களது கேவல சம்பந்தம். சிவஞான சம்பந்தம் சுத்தாவத்தை. சகலாவத்தையில் உயிர்கள் மாயாகாரியப் பொருளிற் பற்றுறுகின்றன. இவ்வுறுதல் திருவருள் திரோதான ரூபமாய் நின்று உயிர்களை மயக்குதலால் வருவதாகும்.

முதல்வனைச் சிறப்பியல்பால் உணரும் மெய்யுணர்வு தோன்றும் வரையில், அவனது பெருங்கருணை உயிர்களிடத்தில் ஒருங்கே நிகழாத வண்ணம் தடுத்து நிற்கும் உயிர்க்குற்றம்

ஆகிய அந்த அந்த மலத்தின் சத்தியின் வழிநின்று அவற்றை நடாத்துவது ஆகிய அவனது சங்கற்பமே உயிர்களை மயக்குவ தாகிய மறைப்பு (திரோபவம்). 'பந்தமும் வீடும் ஆயினுர்' என்றது திருவாசகம். அருளின் தொழிலினும் வேறு தொழி லன்று அத் திரோபவம் (மறைப்பு, மயக்கு).

"மாயையினுல் அனைத்துலகும் மயக்கும் நீ மாமுனிவர்
சேயிழையார் சிலர்தம்மை மயக்கியதோர் சிறப்பாமே." 4

பிக்ஷாண்டவராகித் தாருகவனத்து முனிபத்தினியரை மயக்கி யது ஒரு பெரிய வித்தை அன்று. எல்லா உயிர்களையும் திரோ தானசத்தியாய் நின்று மயக்கும் சிவசத்தி மணவாளன் நீ. உனக்கு முனிபத்தினிகளைத் தனியாகப்போய் மயக்கியது பெருஞ் செயல் அன்று. அத்தகைய மறைத்தற்றெழில் தலையான அளவு உனதே. அது பஞ்சகிருத்தியத்துள் ஒன்றுன மறைப்பே. அதனுல் முனிமனைவியரை மயக்கிய திறம் ஒரு விளையாட்டே. பரத்துவத்தை விளக்கும் அளவு அஃதொரு பெருஞ் செயலன்று. 'சேயிழையார்' இங்கே முனிவர் பத்தினிகளைக் குறித்தது.

## 7. தக்கன் வேள்வியைத் தகர்த்த கடவுள்

ஒவ்வொரு தத்துவங்களுள்ளும் உள்ள புவனங்கள் அத் தனையும் ஒருசேர அழிக்கவல்ல நீ, ஒரு சிறு தக்கன் செய்த மாவேள்வியை அழித்தது உனக்குப் பெருமைதருஞ் செயலன்று. மாதக்கன் ஆயினும் உன் அருளுக்கு மிகச்சிறு தக்கனே. தேவர்க்குப் பெருவேள்வியாகத் தோன்றியதால் தான் அதில் ஈடுபட்டனர். அதன் சிறுமையைத் தாம் அழிய நீ அழித்த போதுதான் தேவர் அறிந்தனர். தக்க யாகப்படலம் பெரிது. அதிற்குறித்த யாகம் சிறிது. அதில் உண்டான துன்பம் பெரிது. அதை அநுபவித்த கூட்டமும் பெரிது. அதை அழிக்க ஆண்டவன் உய்த்த மறக்கருணை சிறிதே. அதுபெரிதும் செலுத்தப்படின் உய்வார் ஆர்?

"மேதக்க புவனங்கள் தொலைத்திடுநீ வெகுண்டாய்போல்
மாதக்கன் பெருவேள்வி தொலைத்ததும் ஓர் வன்மையே." 5

முப்பத்தாறு தத்துவங்களுள்ளும் அத்தத்வாத்துவா ஒழிந்த ஏனைய அத்துவாக்களுள்ளும், அவ்வாறத்துவாக்களையும் கடந்த அருள் வெளியிலும் ஓர் உருவாகி நிறைந்து ஞானிகட்குமட்டும் விளங்கும் நீ, மாலும் இருவர்க்கும் உணர்வரிய மெய்ஞ்ஞானப் பேருருவை மெய்யொளிப் பேருருவாக்கிக் காட்டியது ஒரு பெருமையோ? தத்துவாதீதத்திலும் (அத்துவாதீதத்திலும்) அருள் வெளியிலும் அருளே உருவாக-அதுவே பேருருவாக-முழுநிறைவாக (பூரண வியாபகமாக) விளங்கும் உனக்குப் பிருதிவியண்டத்தில் மட்டும் இருவர்க்கும் காணவொண்ணாதபடி தீப்பிழம்பாய் நின்றது (உன் பரத்துவத்துவத்திற்கு உரிய) சிறப்புடைய செயல் அன்று. ஐங்கலப்பாரஞ் சுமத்தல் சாத்தனுக்கொரு விளையாட்டு என்றால் அவனதுபேராற்றல் ஊகித்தறியலாவதோ? அவ்வாறே உன் பேருருவை ஊகித்தறியக் கூடுமோ.) எவராலும் அறியக் கூடாது. ஞானிகளால்தான் கூடும். 'உணர்ந்தார்க் குணர்வரியோன்.'

> "ஒருருவாய் நிறைந்தநீ இருவர்க்கன் றுணர்வரிய
> பேருருவொன் றுடையையாய் நின்றதுமோர் பெருமையே" 6

## 8. ஞானசொரூபி

சிவபரஞ்சுடர் புறத்தே மாயாரூபியும் மாயாதீதரூபியும் ஞானரூபியுமாக விளங்கும். அகத்தேயும் அம்மூன்றுருவாய் விளங்கும் எனினும், ஞானமே அச் சுடர்க்குச் சொரூபம். ஏனையவை தடத்தம். வந்து நீங்குவது தடத்தம். கொண்டு நீக்குவதும் அது. சொரூபம் அவிநாபாவமாய் விட்டு நீங்கவும் நீக்கவும் இயலாதது. அத்தகையது சிவனுக்கு. மெய்யுணர்வே. அதுவே "ஞான சொரூபம்" எனப்படும். தூல அறிவு உயிர். சூக்கும அறிவு சிவம். தூல அறிவாய உயிரும் சூக்கும அறிவாய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும்நிலை பிரித்தறிய வாராது. சிவ சைதன்யமும் யான் என்னும் உணர்விற்குப் புலப்படும் ஆன்ம சைதன்யத்தொடு விரவிப் புலப்படாது நிற்பதொன்று. அதனால், பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் அறியப்படாத முதல்வனை அம் முதல்வனது ஞானக் கண்ணாலே தன் அறிவின் கண்ணே ஆராய்ந்தறிதல் வேண்டும். தன்னால் உணரும் உணர்விற்குக் கோசரம் ஆகாதது சிவம். கண்ணிடத்து உயிர் நிற்குமாறு

போல நின்றிலன் உயிரிடத்துச் சிவன். உயிர்க்கு அவ்வுயிரறிவாகி உடன் நின்ற கள்வன் அம்முதல்வன். அதனுல் அவனை உன் அறிவின்கண் காண்க என்ருர் சீடனுக்கு அவனுடைய மெய்ஞ்ஞான குரு. உயிரறிவில் சுட்டுணர்விற்கு விஷயம் ஆகாத முதல்வன் சிவஞானத்தால் அறிய விளங்குவன். பாசத்தை அசத்து என்று கண்டு நீங்கிய அறிவிலேதான், சிவத்தை அறியக் கூடும். வேறு அறிகுறி இல்லை. 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' 'அவனருளே கண்ணுகக் காண்' என்பவை ஆசிரியர் அநுபவத்தில் உற்ற உண்மை யாதலின்,

"அறிவினில் அறிபவர் அறிவதை அலதொரு
குறியினில் அறிவுறு குறியினை அலை."

என்ருர். அறிவிலே சிவத்தை அறிபவரே அறிவர். ஏனைய வழிகளில் சிவனை அறிய வழி இல்லை. அல்லதொருகுறியில் அறிவுறு குறியுடையாய் அல்லை என்று சிவனை நோக்கிக் கூறியது நம் மனோர்க்கு ஆணை சிவன்மேலிட்டுக் கூறுதல் போன்றதாகும். ஆகவே இதையே உபதேசமாகக் கொண்டுணர்தல்தகும்.

(தொடரும்)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY
F. KINGSBURY, B. A. (Madras)
AND
G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

[மலர் 13, இதழ் 12-ன் தொடர்ச்சி]

## II

## THIRUNAVUKKARASU SWAMI

(More commonly referred to as APPARSWAMI)

26 கடவுந்திகிரிகடவாதொழியக்கயிலையுற்ருன்
படவுந்திருவிரலொன்றுவைத்தாய்பனிமால்வரைபோல்
இடபம்பொறித்தென்னையேன்றுகொள்ளாயிருஞ்சோலைதிங்கள்
தடவுங்கடந்தையுட்டுங்கானைமாடத்தெந்தத்துவனே.

The notable thing about our next verse is not so much the legend of the crushing of Ravana, who tried to storm the mountain Kailasa, where Siva had His heaven, but rather the thought of the devotee being stamped as the property of his god, a thought which recurs in other hymns. According to tradition Apparswami did receive the Hindu equivalent of St. Francis' stigmata, the mark of Siva's bull as if branded on his body. We cannot help recalling St. Paul's expression in Galatians vi. 17.

26 All other worlds his sceptre swayed,
But when Kailasa he would rule
Thy crushing foot presumption paid.
O stamp me with Thy sacred bull,
White as Himalya's snowy hill.
Accept me, O our truth divine,
There where the moon outsoareth still
Groves of Tunganaimadam's shrine.

(To be Continued)

# நிருபதுங்கவர்மனின் வாகூர்ச்செப்பேடுகள்

திரு. K. M. வேங்கடராமையா அவர்கள் M. A.,
திருப்பனந்தாள்,

**வாகூர்ப்பதி**

வாகூர் அல்லது பாஹுர் (Bahur) கடலூரினின்று புதுச்சேரிக்குச் செல்லும் பெருவழியில் புதுச்சேரிக்கு இப்பால் உள்ளது: இந்நாளில் வாகூர் சிற்றூராக இருக்கிறது. பெருவழிக்கு ஒருபுறத்தில் இரண்டு கல் தொலைவில் இருக்கிறது. பெருவழிக்கு இன்னெருபுறம் பழைய குளமும், பெருமாள்கோயிலும் காணப் பெறுகின்றன. இவ்வெல்லாப் பகுதிகளையும் பழைய வாகூர்ப்பதி கொண்டதாய்ப் பேரூராக இருந்திருத்தல் வேண்டும். இந்நாளைய வாகூரில் ஒரு சிவன்கோயில் உள்ளது; மூலேசுவரர் என்பது இறைவன் திருநாமம். இக்கோயிலில் மூன்றும் கிருஷ்ணன், முதல் இராசராசன், முதல் இராசேந்திரன், இரண்டாம் இராசேந்திரன், முதற்குலோத்துங்கன் ஆகியோர் கல்லெழுத்துக்கள். உள்ளன (S. I. I. Vol VII No. 738 to 814; A. R. 171 to 187 of 1902.)

**வாகூர்ச் செப்பேடுகள்**

வாகூர்ச் சிவன்கோயில் கோபுரத்துக்கு (Pagoda) 6 மீடர் தொலைவில் கற்கட்டடத்துக்குள் ஒரு மீட்டர் ஆழத்துள் 5 செப்பேடுகள் கிடைத்தன. அவை 91·5 மி. மீ. உயரம் உள்ளவை; 201·9 மி. மீ. அகலமுடையவை; 4·1 மி. மீ கனமுள்ளவை. ஒவ்வொரு செப்பேட்டிலும் 13·5 மி. மீ குறுக்களவுள்ள துளையுண்டு; இடது பக்கத்தினின்று 9 மி. மீ. தொலைவில் அத்துளையிருக்கிறது. எல்லாச் செப்பேடுகளையும் பிணிக்கும் வளையம் கிடைத்திலது; வளையத்தின் இருமுனைகளையும் பிணித்து வைத்திருக்கக்கூடிய முத்திரையும் கிடைக்கப் பெறவில்லை. அவை அங்குச் செப்பேடுகள் புதையுண்டதற்கு முன்னமேயே காணாமற் போயிருத்தல்கூடும். இரண்டாவது செப்பேட்டின்

இரண்டாவது பக்கமும் மூன்ருவது செப்பேட்டின் முதற்பக்கமும் சிதைந்துள்ளனவாகும். இங்ஙனம் இச்செப்பேடுகள் திரு. M. Jules Delafon என்பவரால் 1879-ல் கண்டுபிடிக்கப்பட்டன. அவை பாரிஸ் மாநகரில் Bibliotheque Nationales-ல் பாதுகாப்பில் வைக்கப்பட்டுள்ளன. (Epigraphia Indica Vol. XVIII பக்கம் 5.)

**ஆய்வாளர்**

1905-ல் பாரிஸில் வெளியிட்ட கீழைநாட்டு நினைவுகள் (Memoires Orientaux) என்ற சுவடியில் திரு. M. J. வின்சன் (M. Julien Vinson) என்பார் எழுதிய 9-ம் நூற்ருண்டுக்குரிய பாகூர்க்கல்லூரி (Le College de Bahour au IXe siecle) என்ற கட்டுரையில் பக்கம் 211–263-ல் பாகூர்ச் செப்பேடுகள் குறித்து எழுதப் பெற்றுள்ளன. Epigraphia Indica Volume IV-ல் பக்கம் 180–81-ல் இச்செப்பேடுகள் குறித்துப் பேராசிரியர் E. உல்ஷ் (Hultzsh) அவர்கள் சில குறிப்புக்கள் தந்துள்ளார். ராவ்பகதூர் H. கிருஷ்ண சாஸ்திரி அவர்கள் 1917-ல் S. I. I. Vol II ல் பக்கம் 513–17-ல் செப்பேட்டுப் பாடம் தந்து ஆராய்ச்சி முன்னுரையும் எழுதியுள்ளார். இச்செப்பேடுகளின் வரலாற்றுச் சிறப்புக்கருதிப் பேராசிரியர் உல்ஷ் அவர்கள் Epigraphia Indica, Volume XVIII-ல் பக்கம் 5–15ல் ஆங்கில எழுத்துருவில் பாடமும் ஆங்கிலமொழி பெயர்ப்பும் ஆய்வுரையும் 1925ல் சிறப்புற எழுதியுள்ளார். திரு. R. கோபாலன் அவர்கள் M. A., பல்லவர் வரலாறு என்ற நூலில் பக்கம் 140, 141, 199, 200 ஆகிய பக்கங்களிலும், Dr. C. மீனுட்சி அவர்கள் M. A., 'பல்லவர் கால ஆட்சியும் வாழ்க்கையும்' (Administration & social Life under the Pallavas) என்ற நூலில் பக்கம் 205–7லும், Dr. இராசமாணிக்கனுர் அவர்கள் M. A., பல்லவர் வரலாறு என்ற நூலில் 255–57 பக்கங்களிலும் பாகூர்ப் பட்டயங்கள்–கல்லூரி குறித்து எழுதியுள்ளனர். ஜோவோதுப்ராய்த்துரை (Jouveau Dubreuil) தம்முடைய பல்லவர் என்ற நூலில் 49-வது பக்கமுதல் செப்பேட்டுச் சமஸ்கிருதப் பகுதியை திரு. T. A. கோபிநாதராவ் அவர்களின் ஆங்கிலமொழி பெயர்ப்புடன் தந்துள்ளார்,

**செப்பேட்டு மொழி – மொழி நிலை**

செப்பேட்டில் கண்ட மொழி சமஸ்கிருதமும் தமிழும் ஆகும்; எழுத்துருவம் கிரந்தமும் தமிழும். இதில் 32 சமஸ்கிருத செய்யுட்கள் (வரி 1-45; 74-77) உள்ளன; எஞ்சிய பகுதி (வரி 45-74; 78-9) தமிழ்-வசனமாகும். தமிழ்ப் பகுதியிலும் கிரந்த எழுத்துக்களில் சில சொற்கள் எழுதப்பட்டுள்ளன. 34 வரியில், கிரந்தப் பகுதியில் "றைப் புணச்சேரி" என்பது தமிழ் எழுத்தில் உள்ளது. நிலைதாங்கி என்ற தமிழ்ச் சொல் வரி 30-ல் கிரந்த எழுத்திலேயே எழுதப்பெற்றுள்ளது. தமிழ் உச்சரிப்பு முறையின்படி தந்திவர்மன் Danti என்பதற்கு மாறாக Tanthi என்றும் க்ஷ என்பதற்குப் பதில் ட்ச என்றும், மேயி, நெல் வாயி என்ற உருவங்களும் உள்ளன.

**நுதலிய பொருள்**

முதற் செய்யுள் திருமால் வணக்கம்; 2-8 செ. பிரமன் முதல் விமல கொங்கர் வரை பல்லவர் கால் வழிமுறை; 9-11 செ. தந்திவர்மன்; 12 · நந்திவர்மன் III; 13-14 சங்கா; 15-17 நிருபதுங்கன்; 18-21 மார்த்தாண்டன்; 22-23 மூன்றூர்கள்; 24-26 வித்யாஸ்தானம்; 27-30 ஆஜ் ஞப்தி, பிரசஸ்தி எழுதியோர்; வரி 45-74 தமிழ்ப் பகுதி - மூன்றூர்கள் எல்லை; அறம் செய்தமை: செ. 31 அரசனின் வேண்டுகோள்; செ. 32 பட்டயம் எழுதியோன்; வரி 78-79 தமிழ்ப் பகுதி, செ. 32-ல் உள்ள செய்தியே.

**காலம்**

வாகூர்ச் செப்பேடுகள் நிருபதுங்கனின் 8-வது ஆட்சியாண்டில் கொடுக்கப்பெற்றன (வரி 46, 51). அதாவது கி. பி. 858 ஆகும்.

**அரசன்**

பட்டயம் கொடுத்த அரசன் பெயர் விஜயந்ரிபதுங்கவர்மன் (வரி 45), ந்ரிபதுங்கவர்மன் (வரி 74), ந்ரிபதுங்க (வரி 24, 25, 32), துங்கவர்மன் (வரி 42) என்று பல உருவங்களில் குறிக்கப் பெற்றுள்ளது. இவன் நல்ல குணவான்; மூன்று உலகுக்கு

மரசன்; உதய சூரியன் போன்று ஒளிபடைத்தவன்; போரில் வெற்றியுடையவன்; பாண்டியனுக்கு ஒரு சமயம் படையுதவி செய்தவன் (செ. 16); பகை மன்னர் கூட்டத்தை அரிசிலாற் றங்கரைப் போரில் எரித்தவன்; புவனேசுவரனாகிய இவன் இளமை முதற்கொண்டு அரசர்களுள் புகழ் பொருந்தியவன்; இவன் புகழ் இராமன் போன்று பிற இடங்களிலும் பரவி யுள்ளது (செ. 17):

இவன் தந்தை—(மூன்றும்) நந்திவர்மன்.

இவன் தாய்—சங்கா. இவள் முராரிக்கு இலக்குமிபோல நந்திவர்மனுக்கு மனைவியாவள்; ராஷ்டிரகூட குலத்தில் தோன்றியவள்; உலகம் போலப் பொறையுடையவள்; தாய் போல் குடிமக்களால் விரும்பப்பட்டவள்; மிக்க அழகுள்ளவள்; அரசனது நற்பேறே உருவெடுத்தாற் போன்றவள்; மதி காந்தி கலாதிகளையுடையவள்.

### விண்ணப்பித்தவன்

நிருபதுங்கன் காலத்தில் வாகூர்ப் பகுதியில் ஆண்டு வந்த வன் வேசாலிப் பேரரையன் எனப் பெற்றான் (வரி 46); இவன் மார்த்தாண்டன் (செ. 18) என்ற இயற்பெயருடையவன்; நிலைதாங்கி என்ற சிறப்புப் பெயருடையவன்; குரு குலத்தில் பிறந்தவன்; தன்னைச் சரணடைந்த பிரஜைகளைக் காப்பவன்; உலகத்துக்குச் சந்திரன் போன்று திலகமாக விளங்குபவன்; சமுத்திரம்போல் கம்பீரமுடையவன்; சூரியன்போல் உலகை ரக்ஷிப்பவன்; உலகத்தில் நிலைபெற்றவன். இவனே ஆணத்தி வழியாக இச்செப்பேடுகளில் கண்ட அறத்தைச் செய்தான். (செ. 21).

### வாகூர்க்கல்லூரி

வாகூரில் ஒரு வித்யாஸ்தானம் இருந்தது. இது வட மொழிக் கல்லூரி. 'கங்கையின் வேகத்தைச் சடையில் தாங்கிய சிவனைப் போல் சதுர்த்திசைகளிலிருந்தும் வந்த கல்வி வல்லார்கள் பொருந்திய ஆழமுடைய வித்யா நதி வாகூர்க் கிராமத்தில்

தங்கி விட்டது' என்று (செ. 25)-ல் உள்ளது; எனவே வாகூர்க்கல்லூரி கல்விக்கடல் போல் விளங்கியது ஆதல் வேண்டும். "சதுர்த்திசாகணுகுலா" என்பது பேராசிரியர் உல்ஷ் கொண்ட பாடம் (E. 1. Vol. VIII, Part I, Page 11). ஆனால் திரு. H. K. சாஸ்திரி "சதுர்த்தசகணுகுலா" என்று பாடம் கொள்வதோடு, வாகூர்க்கல்லூரியில் 14 கணத்தவர் இருந்தனர் என்றும், இவ்வூர்ப் பேரறிஞர்களால் இக்கல்லூரி நிர்வகிக்கப்பட்டது என்றும் கூறுவர். டாக்டர் மீனுட்சி அவர்கள் "சதுர்த்தசா வித்யாஸ்தான விதித பரமார்த்தஸ்ய" என்று (Gupta Inscriptions P. 113) பிறவிடங்களில் வருதலையும், அங்குக் கொடுக்கப் பெற்ற விளக்கங்களையும் காட்டி, 'சதுர்த்தச வித்யா' என்பது 4வேதங்கள், 6அங்கங்கள், புராணம், மீமாஞ்சை நியாயம், தருமசாஸ்திரம் என்னும் பதினுன்குமாம் என்பர். எனவே வாகூர் வித்யாஸ்தானத்தில் பதினுன்கு வித்தைகள் கற்பிக்கப் பெற்றனவாதல் தெளிவு.

**அறம்**

வாகூர் வித்யாஸ்தானத்தை நடத்தச் சேட்டுப் பாக்கம், விளாங்காட்டங் கடுவனூர், இறைப்புனைச்சேரி என்ற மூன்று ஊர்களும், பழைய அறமும் பிரமதேயமும் நீக்கி முன்பெற்றுரை மாற்றி, வாகூர் வித்யாஸ்தானத்துக்கு வித்யா போகமாக அளிக்கப்பெற்றன. இம்மூன்றூர்களும் வேசாலிப்பேரரையன் ஆட்சியிலுள்ள நாட்டுட்பட்ட ஊர்களாகும். அரசனது இசைவு பெற்றுத் தன் நாட்டுள்ள இம்மூன்றூர்களையும் இத்தலைவன் இந்த வித்யாஸ்தானத்துக்கு அளித்தனன். சமஸ்கிருதப் பிரசஸ்தியில், விளாங்காட்டங்கடுவனூர், "ரகரத்தை இறுதியில் உள்ளதும் வித்யா விளாங்கா என்பதை ஆதியாக உடைய்துமான பெயருடைய ஊர்" என்று குறிக்கப்பட்டுள்ளது. இவ்விளக்கத்தால் விளாங்காட்டங்கடுவனூரை அறிந்து கொள்ள முடியாது; எனினும் தமிழ்ப்பகுதியினின்று இப்பெயர் நன்கு அறியப்படுவதாயிற்று. வித்யா என்ற அடை, வித்யாஸ்தானத்துக்கு இவ்வூரைத் தருதலால், தரப்பெற்றது என்று கொள்ளலாம்! வாகூர், அருவா நாட்டுக் கீழ்வழி வாகூர் நாட்டின் கண்ணது.

எல்லை

விளாங்காட்டங்கடுவனூர்க்கும் சேட்டுப்பாக்கத்துக்கும் எல்லை :—

கிழக்கு — காடும் நென்மலிப் பாக்கமும்.
தெற்கு — நென்மலிப்பாக்கமும், நெல்வாய்ப்பாக்கமும், உறத்தூரும்.
மேற்கு — மாம்பாக்கமும், விளாங்காட்டங் கடுவனூர்ப் பிரமதேசம் 60 செரு.
வடக்கு — வாகூர்.

இறைப்புனைச் சேரிக்கு எல்லை :—

கிழக்கு — நத்தம் உள்ளிட்ட காடு
தெற்கு — நெருஞ்சிக் குறும்பு
மேற்கு — வாகூர்
வடக்கு — கிறிமான்பட்டி

இவற்றைப் பின்வருமாறு வரைந்து காட்டல் தகும் :—



**இந்நாளில்**

விளாங்காட்டங்கடுவனூர் என்பது இந்நாளில் கடுவனூர் என்ற பெயரோடுள்ளது; இது வாகூர்க்குத் தென்மேற்கில் மூன்றுமைல் தொலைவிலுள்ளது. இறைப்புனைச் சேரிக்குக் கிழக்கேயிருந்த காட்டுப்பகுதியைக் காட்டுப்பாக்கம் என்ற ஊர் நினைவு படுத்துகிறது; அதன் வடக்கிருந்த கிரிமாம்பட்டி இன்றைய கிரிமாம்பாக்கம் ஆதல்கூடும்; இந்நாளைய பின்னுச் சிக்குப்பம், பட்டயத்தில் குறிப்பிட்ட இறைப்புனைச் சேரியாதல் தகும்.

**ஆணத்தி**

இதற்கு ஆணத்தி (ஆஜ்ஞப்தி)யாக இருந்தவன் உத்தம சீலன் எனப்பெற்றான் (வரி 41). இவன் (ந்ருப)துங்கவர்மனின் மந்திரியாவன் (வரி 42); பிரஹஸ்பதி போன்றவன்; விடேல் விடுகு காடுபட்டித்தமிழ்ப் பேரரையன் என்ற சிறப்புப் பெயருடையவன் (See P. 17 of மீனாட்சி.)

**நிறை வேற்று முறை**

முதலில் நாட்டார்க்கு இச்செய்தி திருமுகத்தின் மூலம் தெரிவிக்கப்பட்டது. நாட்டார், திருமுகம்கண்டு தொழுது தலைக்குவைத்துப் பதாகைநடந்து கல்லுங் கள்ளியும் நாட்டி, அறையோலை விடுத்தனர்.

**ஊர்களோடு கொடுத்தவை**

ஊரிருக்கையும் மனையும் மனைப்படப்பும் மன்றும் கன்று மேய் பாழும் குளமும் கொட்டகாரமும் கிடங்கும் கேணியும் காடும் களறும் ஓடையும் உடைப்பும் நீர்பூசி நெடும் பெறிந்து உடும்போடி ஆமைதவழ்ந்த தெல்லாம் உண்ணிலம் ஒழிவின்றித் தரப்பெற்றன.

**செப்பேடு எழுதியவர்**

இச்செப்பேடுகளை எழுதியவன் நிருபதுங்கன் என்ற பெயருடையவன்; இவன் உதிதோதித குலதிலகன்; தட்டார் குலத்தவன்; பலகலைகளிலும் வல்லவன்; பல்லவ குலத்து வழிவழித்

தொண்டு செய்து வந்தவன்; மாதேவிப் பெருந்தட்டான் என்ப வனின் மகன்; உதிதோதயப் பெருந்தட்டானின் பேரன்; கச்சிப் பேட்டுக் கிழ்ப்பைசாரம் என்ற ஊரினன்.

**பிரசஸ்தி எழுதியவர்**

வடமொழிப் பகுதியை எழுதியவன் நாகயன் என்ற பெயரி னன்; (தாசயன் என்று கூறுவாரும் உண்டு. செ. 30; S. I. I. Vol. II. பக்கம் 514). இவன் வாகூர்க் கிராமத்து வித்யாஸ் தானத்துத் தாசன்; க்ருதவான்; சாஸ்திர தத்வக்ஞன். எனவே இவன் வாகூர்க் கல்லூரியில் அலுவலில் இருந்தவனென்றும் எல்லாச் சாத்திரங்களிலும் வல்லவனென்றும் கொள்ளலாம்.

**போது**

நிருப்துங்க பல்லவன் காலத்து இவ்வித்யா போகம் தரப் பெற்றமையின் பல்லவநாட்டின் தென்பகுதியில் இவன் காலத்து இக்கல்லூரி சிறப்புற்றிருந்ததாதல் வேண்டும். இவ்வறக் கொடை பெறுதற்குமுன்பே இக்கல்லூரி சிறந்திருந்தது. இவ் வூர்க்கோயிலில் மூன்றும் கன்னரத் தேவன், முதல் இராசராசன் முதலியோருடைய கல்வெட்டுக்கள் இருந்த போதிலும், அவற் றுள் ஒன்றுதானும் இக்கல்லூரியைக் குறிக்காதது பெருவியப் பைத்தருகிறது. எனவே பல்லவர் ஆட்சி நீங்கியவுடன் இக் கல்லூரியும் பெருமைகுன்றி, நிலையான அரச ஆதரவு அற்று, நாளாவட்டத்தில் மறைந்தது போலும்!

---

(தொடரும்)

# "கருணை"

திரு. கிருபானந்தவாரி அவர்கள்.

ஒவ்வொருவரும் இறைவனுடைய கருணையைப் பெற வேண்டும் என்றுதான் விரும்புகிறார்கள். ஆனால் அதற்குரிய வழிவகை தெரியாமல் தவிக்கிறார்கள். ஒரு ஊருக்குப் போக வேண்டும் என்றால் வழி தெரிந்து கொண்டு போவது மிக மிக அவசியமானது. அதுபோல் இறைவனுடைய கருணையைப் பெற வேண்டுமானால் அதற்கு வழி எது என்பதை உணர்வது இன்றியமையாத அறிவுடைமையாகும்.

இறைவன் கருணைக்கடல்; கருணை மேரு; கருணை மேகம். யாவருக்கும் மேலானவன்; அரியவன்; பெரியவன்.

இத்தகைய எம்பெருமானுடைய கருணையை நாம் பெற வேண்டுமானால், நாம் கருணையுடையவர்களாக இருக்க வேண்டும். முள்ளை முள்ளால்தான் எடுக்க வேண்டும். மானை மான் காட்டிப் பிடிக்க வேண்டும். அது போல் எளியவர்களிடத்தில் நாம் கருணை காட்டினால், நாம் இறைவனுடைய கருணையைப் பெறலாம். கருணையைக் கருணையால்தான் பெற வேண்டும்.

திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் திருவீழிமிழலையில் தங்கியிருந்தார்கள். அப்போது வான்மழை சுருங்கி எங்கும் உணவுப் பொருள் அருகிப் பஞ்சம் பெருகியது. அதனைக் கண்ட இரு தவ சீலர்களும் இறைவனிடம் படிக்காசு பெற்று, பெரிய அளவில் உணவு தயாரித்து, பறைசாற்றி வறியார்க்கு முப்போதுந் தப்பாது உணவு அளித்தார்கள்.

திருமருகல் என்ற திருத்தலத்துக்கு ஞானப்பாலுண்ட ஞானசம்பந்த சுவாமிகள் எழுந்தருளினார். விடியற்காலை திருக்

கோயிலுக்குச் செல்லுகின்ருர். அங்கு ஒரு இளம் பெண் அழுது கொண்டிருந்தாள். தாவிப் படரக் கொழுகொம்பில்லாத தனிக் கொடிபோல் அம்மடவரல் "ஓ" என்று வாய் விட்டுக் கதறிப் பதறிக் கண்ணீர் வடித்து, துடித்து, துள்ளி அழுவதைக் கண் டார் ஞானசம்பந்தர்.

அவர் அறிவுடன் தொடர்பு கொண்டவர். ஞானம் என்ருல் அறிவு. சம்பந்தம்—தொடர்பு கொள்வது.

அறிவின் பயன் எது? பிறவுயிர் படும் துன்பத்தைக் கண்டு கருணை செய்வதுதான் அறிவினுல் ஆகும் பயன்.

"அறிவினு லாகுவ துண்டோ பிறிதின்நோய்
தன்னேய்போல் போற்ருக் கடை"

என்கிருர் திருவள்ளுவர்.

ஆதரவு இன்றித் தன்னந்தனியாக ஒரு பெண்மணி அழுவ தைக் கண்ட திருஞானசம்பந்தர் "நாட்டில் நாலாயிரம் நிகழ்ச்சி கள். நாம் வழிபாடு செய்யத் திருக்கோயிலுக்குப் போகின் ருேம். யார்? எதற்காக? எங்கு? அழுதால் நமக்கென்ன? ஒவ் வொருவருக்கும் ஒவ்வொரு வகையில் துன்பம். ஊழ் காரண மாக உயிர்கள் துன்புறுகின்றன" என்று அவர் கருதிக் கோயி லுக்குள் சென்ருரா? இல்லை. இல்லை.

துன்பக் கடலில் விழுந்து துடிக்கின்ற அவள்பால் அப்பெரு மானுக்குக் கருணை வெள்ளம் பொங்கி எழுந்தது. அவளுடைய துன்பத்தைக் களைந்த பின்னர் ஆலய வழிபாடு செய்யலாம் என்று அவர் கருதினுர்.

அழுகின்ற அப்பெண்மணியை நோக்கி, 'அம்மா அழாதே; உனக்கு உற்ற இடர் யாது?" என்று தாய் போல் பரிந்து கேட் டருளினுர். அவள் திருஞானசம்பந்தரைத் தொழுது அழுது கொண்டே கூறுகின்ருள்:

"ஐயனே! வைப்பூரில் வாழ்கின்ற தாமன் என்ற வணிகர் தலைவனுடைய மகள் யான். என் தந்தைக்கு ஏழு புதல்விகள்.

என் அத்தை மகன், தாய் தந்தையர் இன்றி எங்கள் வீட்டில் வளர்ந்து வந்தார். என் பிதா ஒவ்வொரு பெண்ணாக உனக்குத் தருவேன் தருவேன் என்று கூறி, சொன்ன சொல்லைக் காற்றில் பறக்கவிட்டு, தனவந்தர்கட்குக் கல்யாணம் பண்ணித் தந்தார். முடிவில் என்னையும் அவ்வாறே இவருக்குத் தருவதாக வாக் களித்து வேறொரு தனவந்தருக்குத் தருவதாகத் தீர்மானித்தார். வாக்களித்த மாத்திரத்திலேயே யான் என் அத்தை மகனுக்கு மனைவியாகி விட்டேன். பிறகு மற்றவரை மணப்பது பெண் ணறமாகாது. ஆதலால் வாடி வருந்தியுள்ள என் அத்தை மகனும் நானும், உற்றாரையும் பெற்றாரையும் துறந்து அயலூர் சென்று மணம் புரிந்து கொள்வோம் என்று கருதிப் புறப்பட்டு வழி நடந்து வந்தோம். இரவு இந்த மடத்துத் திண்ணையில் படுத்தோம். அரவந் தீண்டி இதோ என் எதிர்காலக் கணவனார் இறந்து விட்டார். பெருமானே! அரவந் தீண்டியும் யான் தீண் டாது அழுகின்றேன். விதிப்படிப் பாணிக்கிரகணம் ஆகாமை யால் இவரை யான் தீண்டி அழவும் இயலாதவளாகக் கலங்கி நிற்கின்றேன். தாய், தந்தை, உடன் பிறந்தார் முதலிய அனை வரையுந் துறந்து, இவரை நம்பி வந்தேன். இவர் என்னை நட்டாற்றில் விட்டு நடந்து விட்டார். இனி எனக்கு வாழ்வு ஏது? என் முன்வினை மூண்டது போலும்" என்று கூறி முறை யிட்டாள்.

திருஞானசம்பந்தர், அப்பெண்மணியின் துயரைக் கேட்டுப் பெரிதும் கருணை கொண்டார். "அம்மா! அழாதே! திருக்கோயி லில் கருணைக் கடலாயுள்ள எம்பெருமான் உன் துயரைக் களை வார். வருந்தற்க" என்று ஆறுதல் கூறியருளினார்.

அவளை அழைத்துக் கொண்டு திருக்கோயிலுக்குள் சென்றார். இறைவனே! ஆலம் உண்ட நீலகண்டப் பெருமானே! நஞ்சராவணிந்த நம்பனே! பாம்பணையில் துயின்ற பரந்தாமனும், விதிவிலக்கு வரையும் வேதனும் போற்றும் வித்தகனே! இவள் உன்னை நாத்தழும்பேற ஏத்தி ஏத்தித் தோத்திரம் புரிகின்றாள். இவள் துயரைக் களைவாய்" என்று சுவாமியிடம் முறை யிட்டார்,

சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரு மருகல்
உடையாய் தகுமோ இவள்உள் மெலிவே.

என்ற தேவாரப் பாடலைப் பாடியருளினார்.

அந்த அமுதப் பாடல் பாடியவுடன், இறைவன் கருணையால், மாண்ட செட்டிக் குமாரன் உயிர் பெற்று எழுந்தான். அப்போது அல்லல் பட்டழுத அம்மங்கை ஆனந்த வெள்ளத்துள் திளைத்தாள். இருவருக்கும் அங்ஙனமே திருமணஞ் செய்வித்தார் திருஞானசம்பந்தர்.

இறைவனுடைய கருணையை நாடிய ஞான சம்பந்தர் தானும் கருணையுடையவராகத் திகழ்ந்தார்.

குசேல முனிவர் வறுமையாகிய சிறுமையில் முழுகினவர். அப்படி வறுமைப்பிணி மூடியும் அவருடைய மனம் சதா கண்ண பிரானையே நாடியது. மனைவியின் வேண்டுகோளின் படியே கண்ணனைக் காணப் புறப்பட்டார். அவர் வாழும் அவந்திக்கும் துவாரகைக்கும் நெடுந் தூரம். குடையும் பாதரட்சையும் அவருக்கு ஏது? கடும்வெயில் அக்கினிப் பிழம்பாக ஆதித்தன் காய்கின்றான். மண் சுடுகிறது. குசேலர் இந்த வெயிலில்தான் நடக்கின்றார். அவர் செல்லும் சாலையில் இரு புறங்களிலும் நல்ல நிழல் தரும் மரங்கள் குளிர்ந்த நிழலைத் தந்துகொண்டிருக்கின்றன. குசேல முனிவர் அந்த நிழலில் ஒதுங்கிச் சென்றால் வெயிலின் கொடுமையிராது. ஆனால் அவர் நிழலில் ஒதுங்காமல் நடுச்சாலையில் செல்கின்றார். கால் சுடுகின்றது. தலை சுடுகின்றது. இரு கரங்களையும் விரித்துத் தலைக்குமேல் மறைத்துக்கொண்டு, "கண்ணா! கண்ணா! தாங்க முடியாத வெப்பமாக இருக்கின்றதே. என் செய்வேன்? இன்னும் எத்துணை தூரம் இருக்கின்றதோ?" என்று கூறிக்கொண்டே நடக்கின்றார். அவர் ஏன் நிழலில் ஒதுங்கவில்லை? காரணம் தெரிகின்றதா? "ஈக்கள், எறும்புகள், புழுக்கள் முதலிய சிற்றுயிர்கள் கொடிய வெயிலைத் தாங்க மாட்டாது-நிழலில் ஒதுங்கி இருக்குமே? நாம் நிழலில் நடந்தால் அச்சிற்றுயிர்கள் இறந்துபடும்'

என்று கருதினுர். கருணை காரணமாகவே நிழலில் ஒதுங்கா மல் வெயிலில் நடந்து துன்புற்ருர். இத்தகைய கருணை அவர் பால் இருந்ததனுல் கண்ணபிரானுடைய கருணை அவர்பால் சுரந்தது.

சீத நீழற்செலில் சிற்றுயிர்த் தொகை
போதச் சாம்பும்என் றெண்ணிய புந்தியான்
ஆத வன்தவழ் ஆறு நடத்திடும்
காதல் அங்கை விரித்துக் கவித்தரோ.

– குசேலோபாக்கியானம்

நம் தமிழகத்தில் பிறவுயிர்க்குப் பெரிதும் இரங்கிய திருவா ளர்கள் பலர் வாழ்ந்தார்கள். ஓரறிவுடைய முல்லைக்கொடி தனியே வாடி நிற்பதைக் கண்ட பாரி மன்னன், தன் தேரை நிறுத்தி அதன் மீது கொடியைச் சுற்றி அதற்கு உதவி புரிந்து நடந்து சென்ருன். அவனுடைய கருணை எத்துணை விழுமியது?

ஒரு தலைவன் அயலூர் சென்றிருந்தான். தன் கருமம் முடிந்தது. அவன் இளைஞன், கருமம் முடிந்ததும் தன் வீட்டி லுள்ள தலைவியை நினைத்தான். காதல் வெள்ளம் கரைபுரண்டு ஓடியது. தலைவியை நோக்கித் தலைவன் புறப்பட்டான். மணி கள் பூட்டிய தேரில் வருகின்ருன். வழியில் இரு மருங்கிலும் பூச்செடிகள். நிரம்ப மலர்கள் குலுங்குகின்றன. அம்மலரில் வண்டுகள் தம் தம் காதல் நிறைந்த பெண் வண்டுகளுடன் அமர்ந்து தேனைக் குடிக்கின்றன. இதனைக் காண்கின்ருன் தலைவன். அவன் உள்ளம் கருணை மயமானது. தேரின் மணி கள் ஒலித்தால் தேன் உண்ணும் வண்டுகள் அஞ்சியகலும். அவைகட்கு இடையூருகும் என்று அவனுடைய திருவுள்ளம் எண்ணி உருகியது. தேரை நிறுத்தினுன். தேரில் உள்ள ஒவ் வொரு மணிகளின் நாக்குகளையும் அசையா வண்ணம் சிறுசிறு கயிறுகளால் கட்டினுன். இப்போது மணியின் நா அசையாது நின்றது. வண்டுகட்கு இடர் விளையாது என்று மன நிறைவு கொண்டான். தேர் ஏறித் தன் காதலியை நாடிச் சென்ருன். அப் பெருமகனின் கருணையை நினைத்தால் கல் மனமும் கரையுமே!

“ பூத்த பொங்கர் துணையோடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணி நா வார்த்த மாண்வினைத் தேரன்
உவக்காண் தோன்றும் ” — அகநானூறு

ஆகவே இறைவனுடைய கருணையைப் பெற விழைகின்ற ஒவ்வொருவரும் பிறவுயிர்களிடம் கருணை காட்ட வேண்டும். எல்லாவுயிர்களிடத்திலும் இறைவனைப் பார்க்க வேண்டும். எல்லாவுயிர்களும் இறைவனுடைய கோயில்கள். ஆதலால் இறைவனை, எல்லாவுயிர்களிலும் கண்டு அவ்வுயிர்கட்கெல்லாம் கருணை செய்தல் வேண்டும்.

அதுவே கடைத்தேறும் வழி.

---

# தமிழ் பொங்குக!

பல்லவி

பொங்குக பொங்குகவே —எங்கும்
தமிழ் மணம் –
பொங்குக! பொங்குகவே !!

அனுபல்லவி

எங்கும் புகழ்தமிழ், சங்கம்வளர் தமிழ்
எங்கணும் கமழ்ந்திடப் (பொங்குக

சரணம்

பார்புகழ் மொழிதனை உணர்ந்திடப்
பாவலர் மொழித்திறன் கேட்டிட
இன்பநல் இலக்கியம் சுவைத்திட
எங்கும்நம் தமிழ்மணம் கமழ்ந்திடப் (பொங்குக)

து. சுப்பிரமணியன்,
அபினிமங்கலம்,

# தமிழ் முருகன்

திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள்.

முருகனைத் தமிழ்த் தெய்வம் என்று கூறுவது ஒரு மரபு. 'அவன் தமிழ் நாட்டுக்கு மட்டும் தலைவன்' மற்ற இடங்களுக்குத் தலைவன் அல்லன்' என்பது கருத்து அன்று. அவன் தமிழ் நாட்டில் தன் பேரருட் பெருக்குக்கு நிலைக்களமாகிய திருக்கோயில்களை உடையவனாக விளங்குகிறான். அவன் எல்லா உலகங்களுக்கும் தலைவன்.

தமிழ்மரபோடு ஒட்டிய பல கருத்துக்களை முருகனுடைய வரலாற்றில் காணலாம். அவனைக் குறிஞ்சிக் கிழவன் என்று சொல்வார்கள்.

"விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ"

என்பது திருமுருகாற்றுப்படை. மலையும் மலையைச் சார்ந்த இடங்களுமாகிய குறிஞ்சி நிலத்துக்கு அவன் தலைவன்.

அகப்பொருள் இலக்கண நூல்கள் நிலத்தை ஐந்து வகையாகப் பிரிக்கின்றன; குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்பன அவை. இந்த ஐந்து நிலங்களுக்கும் முறையே முருகன், துர்க்கை, திருமால், இந்திரன், வருணன் என்பவர்களைத் தெய்வங்களாக வரையறுத்திருக்கின்றனர்.

"சேயோன் மேய மைவரை உலகமும்"

என்பது தொல்காப்பியம். குறிஞ்சித் திணையாகிய மைவரை உலகில் முருகன் விரும்பித் தங்கியிருக்கிறான். ஐந்து திணைகளிலும் முதலாவது குறிஞ்சி. உலகம் நீரில் மூழ்கிக் கிடந்த பிரளயத்தின் பிறகு முதல் முதலில் தோற்றியது மலைதான்,

"மலைஞாறிய வியன் ஞாலத்து"

என்று சங்கச் சான்றோர் கூறுவர். மலை முதலில் தோற்றிய தோடு மிக உயரமுள்ளதாகவும் இருக்கிறது. பழமையும் உயர்வும் உள்ள குறிஞ்சிக்கு முருகனைத் தெய்வமாக வைத்து வழி பட்டார்கள்.

இந்த வரையறை சமயக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது என்று சொல்வதற்கு இல்லை. முருகனைத் தெய்வமாகக் கொள்ளாதவர்களும் இதனை மாற்றவில்லை.

தொல்காப்பியர் இந்தநாட்டுப் பழஞ் சமயத்தைச் சார்ந் தவர் ஆதலின் அவர் கூறியது சமயச் சார்பு உடைய கருத்து என்று சிலர் சொல்லலாம். இந்த வரையறை தொல்காப்பியர் அமைத்ததன்று. தொன்று தொட்டு வந்து கொண்டிருக்கும் மரபு இது. பின் வந்த இறையனாரகப் பொருளின் உரையும், 'குறிஞ்சிக்குத் தெய்வம் முருகவேள்' என்று சொல்லுகிறது.

பொன்பற்றி என்னும் ஊரில் தோன்றிய புத்தமித்திரர் என்பவர் பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். தாம் வாழ்ந்த காலத்துச் சோழ அரசனாகிய வீர சோழனுடைய பெயரை வைத்து, வீரசோழியம் என்ற இலக்கண நூலை இயற்றினார். அதில் ஐந்து இலக்கணங்களும் உள்ளன.

புத்த மித்திரருடைய பெயரே அவர் பௌத்தர் என்பதைத் தெரிவிக்கும். அவ்விலக்கண நூலின் முதல் பாடலே புத்த பகவானுக்குரிய வணக்கமாக இருக்கிறது.

"மிக்கவன் போதியின் மேதக் கிருந்த்வன்
மெய்த்தவத்தான்
தொக்கவன் யார்க்கும் தொடரஒண் ணுதவன்
தூயனெனத்
தக்கவன் பாதம் தலைமேல் புனைந்து
தமிழுரைக்கப்
புக்கவன் பைம்பொழிற் பொன்பற்றி மன்புத்த
மித்திரனே"

என்பது அப்பாடல். முருகனை வழிபடும் மரபைச் சேர்ந்தவர் அல்லர் அவர். அவர் வேண்டுமாயின் திணைகளுக்குப் பௌத்த மதத் தெய்வங்களைச் சொல்லியிருக்கலாம்.

அகத்தியனுக்குச் சிவபெருமான் தமிழை அறிவுறுத்தினுன் என்பது பெருவழக்கு. அதனை மாற்றிப் பௌத்தத் தெய்வமாகிய அவலோகிதன் அங்ஙனம் செய்ததாக அவர் பாடியிருக்கிறுர்.

> "ஆயும் குணத்தவ லோகிதன் பக்கல்
> அகத்தியன்கேட்
> டேயும் புவனிக் கியம்பிய தண்டமிழ்"

என்று வீரசோழியத்தில் வருகிறது. அவ்வாறு சொன்னவர் குறிஞ்சி முதலிய திணைகளுக்குரிய தெய்வங்களை மாற்றவில்லை. குறிஞ்சிக்குத் தெய்வம் முருகன் என்றே அவரும் சொல்கிறுர்.

> "மலையிருள் முன்பனி கூதிர்வெற் பன்கண
> மூங்கில்மஞ்ஞை
> இலைமலி வேங்கைசெங் காந்தள் இலவம்
> இகல்முருகன்
> சிலைமலி குன்றவர் தேனே புணர்தல்
> தினைசுனையும்
> கொலைமலி யானை குறிஞ்சியென் றின்ன
> குறிஞ்சியிலே"

என்பது குறிஞ்சிக்கு உரிய முதற் பொருள் முதலியவற்றைக் கூறும் சூத்திரம். அங்கே ஐயத்துக்கு இடமின்றி, "இகல் முருகன்" என்று வைத்திருக்கிறுர்.

பௌத்தரைப் போலவே சைனரும் சிவபெருமான் முதலிய தெய்வங்களை ஒப்புக் கொள்ளாதவர்கள். வீர சோழியத்துக்குப் பின் இயற்றப் பெற்றது அகப்பொருள் விளக்கம் என்னும் நூல். அதை இயற்றியவர் நாற்கவிராச நம்பி என்னும் சைனப் புலவர். அந்த நூலை நம்பி அகப்பொருள் என்றும் சொல்வர். அந்த நூலே பிற்காலத்துக் கோவைக்கெல்லாம் இலக்கணமாக

விளங்குவது. இன்று புலவர்களால் பெரிதும் போற்றப்படுவது. அந்த நூலிலும் ஐந்திணைக்குரிய தெய்வங்களை அதன் ஆசிரியர் மாற்றவில்லை. குறிஞ்சிக்குத் தெய்வம்,

"விறற் சேய்"

என்றே வகுக்கிறார்.

இவைமட்டும் அல்ல. 18-ஆம் நூற்றாண்டில் இந்நாட்டுக்கு வந்த கிறிஸ்துவப்பாதிரியாகிய பெஷி அல்லது வீரமாமுனிவர் தமிழைக்கற்று இலக்கிய இலக்கணங்களை இயற்றினார். சிந்தாமணியை நன்கு பயின்று, அதன் நடை முதலியவற்றை அடியொற்றி ஏசுநாதர் வரலாற்றைத் தேம்பாவணி என்னும் காப்பியமாகப் பாடினார். அவர் தொன்னூல் என்ற இலக்கண நூலை இயற்றினார். அதிலும் ஐந்திணைகளுக்குரிய தெய்வங்களை மாற்றாமல் சொன்னார். குறிஞ்சிக்கு முருகனே தெய்வமாக இருக்கிறான்.

இவ்வாறு எல்லாச் சமயத்தினரும் குறிஞ்சிக்குத் தெய்வம் முருகனே என்று ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

* * *

தமிழில் சிறப்பாக அமைந்தது பொருள் இலக்கணம். அதிலும் அகப்பொருள் சிறந்தது. அது களவு, கற்பு என்ற இரண்டு பிரிவை உடையது. அடுப்பாரும் கொடுப்பாரும் இன்றி, உருவும் திருவும் ஒத்த காதலர் இருவர் தம்முட்கூடி இன்புறும் ஒழுக்கம் களவொழுக்கம் ஆகும். உலகறியத் திருமணம் செய்துகொண்டு வாழும் ஒழுக்கம் கற்பொழுக்கம்.

முருகன் இந்த இருவகை ஒழுக்கத்தையும் தன் திருவிளையாடல்களினால் நிலைநிறுத்தினான். முதலில் கற்பு நெறியின்படி இந்திரனுடைய மகளாகிய தேவசேனையைத் திருமணம் செய்து கொண்டான். பிறகு தானே வலியச் சென்று வள்ளிநாயகியைக் களவுத் திருமணம் புரிந்து கொண்டான். இந்தச் சிறப்பைப் பரிபாடல் என்னும் சங்க நூல் சொல்கிறது.

"காதற் காமம் காமத்துச் சிறந்தது"

என்று சொல்லிக் களவுப் புணர்ச்சியால் வள்ளி சிறந்தாள் என்று அப்பாடல் சொல்கிறது. அங்கே உரையாசிரியர், 'அக் களவிற் புணர்ச்சியை உடைமையான் வள்ளி சிறந்தவாறும் அத்தமிழை ஆய்ந்தமையான் முருகன் சிறந்தவாறும் கூறு கின்ருர்' என்று எழுதுகிருர்.

"செம்மான் மகளைக் களவுகொண்டு
வருமா குலவனை" (கந்தர் அலங்காரம்)

என்று இந்தக் களவை அருணகிரியார் சொல்வார்.

திருமுருகாற்றுப்படை தேவயானை யம்மைக்கு முருகன் கணவன் என்பதை,

"மறுவில் கற்பின் வாணுதல் கணவன்"

என்று சொல்கிறது. கற்புமணத்தால் கொண்ட குற்றமற்ற தெய்வயானையின் கணவன் என்பது அதற்குப் பொருள்.

ஆகவே, முருகன் களவு, கற்பு என்னும் இருவகை ஒழுக் கத்தையும் தன்னுடைய திருவவதாரத்தில் நடத்திக் காட்டினுன் என்பது தெளிவாகும்.

* * *

புறப் பொருள் பெரும்பாலும் வீரச் செயல்களைப் பற்றிக் கூறுவது. போரைப் பற்றியும் அதனோடு சார்ந்த பல செயல் களைப் பற்றியும் அமைந்த துறைகளை மிகுதியாக உடையது.

முருகன் காதலில் சிறந்து நிற்றலைப் போலவே வீரத்திலும் சிறந்து நிற்கிருன். வீரர் பயிலும் படைகள் பலவகை. அவற்றில் வில், வாள், வேல் என்பவை சிறந்தன. அந்த மூன்றிலும் வேல் சிறந்தது. அதனையுடையவன் முருகன்.

"வேலே விளங்கு கையான்" (கந்தர் அலங்காரம்)

புறப்பொருளையும் திணைகளாகப் பிரித்திருக்கிருர்கள். தொல் காப்பியத்தின்படி அமைந்த திணைகளுக்கும் புறப் பொருள் வெண்பா

மாலையின் படி அமைந்த திணைகளுக்கும் சில வேறுபாடுகள் உண்டு. ஆனாலும் அடிப்படையான கருத்துக்களில் வேறுபாடு இல்லை.

இரண்டு நூல்களின்படியும் முதல்திணை வெட்சி. அகப் பொருளில் முதலில் நிற்கும் திணை குறிஞ்சி என்பதையும், அதனோடு தொடர்புடையவன் முருகன் என்பதையும் முன்பு பார்த்தோம். அவ்வாறே புறப்பொருளிலும் முதல் திணையோடு தொடர்புடையவன் முருகன் என்பதற்கும் சான்று உண்டு.

அகப் பொருளிலும் புறப் பொருளிலும் வரும் திணைகளின் பெயர்கள் யாவும் மலர்களின் பெயர்களே. குறிஞ்சி என்பது ஒருவகை நீலமலர். அது பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் பூக்கும்; மிகுதியான தேனையுடையது. அந்தமலர் முருகனுக்கு விருப்பமானது. புறப்பொருளில் முதல்திணை யாகிய வெட்சியின் பெயரும் ஒருமலரால் வந்தது. அந்தத்திணை குறிஞ்சியின் புறமென்று இலக்கணம் கூறும். வெட்சிமலரும் முருகனுக்கு உகந்தது.

"கொற்ற மயூரம் என்கிலை வெட்சித் தண்டைக்
கால் என் கிலை" (கந்தர் அலங்காரம்)

என்று அருணகிரியார் அதனைக் கூறுகிறார்.

இவ்வாறு தமிழுக்கே சிறந்த பொருட் பகுதியோடு பல வகையில் தொடர்புடைய முருகனைத் தமிழ் முருகன் என்று சொல்வது மிகவும் பொருத்தமானதல்லவா?

# சிவனும் ஊர்தியும்

திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் எம். ஏ.

சிவபிரானுடைய ஊர்தியாகத் தேவாரத்திற் கூறப்பட்டவையே இங்குக் குறிப்பிடப்படுகின்றன. அவர் உகந்து ஏறும் ஊர்தி ஏறு.

"ஏறுகந் தேறிய காள கண்டன்" – சம்பந்தர். 2-79-1

"ஏறேற என்றும் உகப்பாய் போற்றி" – அப்பர். 6-5-5.

"வெள் ளேறுகந் தேறுவீர்" – சுந்தரர். 7-43-9.

என வருவன காண்க. இதனுல் தேவார ஆசிரியர் மூவரும் "யானே, குதிரை, தேர், இவை இருக்க நீர் ஏன் ஏற்றினே உகந்தீர்" எனப் பெருமானேயே வினவுகின்றனர்.

"மற்றேரும் பரிமாவும் மதகளிறும் இவையொழியப்
பெற்றேறும் பெருமானுர்."

சொலீர் பெற்றம்(ஏறு) ஏறுதல் பெற்றிமையோ
பெருமானிரே." – சம்பந்தர். 3-64-10; 2-1-2.

"பிடிமத வாரணம் பேணுந் துரகம் நிற்கப் பெரிய
இடிகுரல் வெள்ளெரு தேறுமி தென்னேகொல் எம்மிறையே,"
– அப்பர். 4-103-1.

"வெள்ளேறன்றி ஏறுவ தில்லே யோஎம் பிரானுக்கே."
– சுந்தரர். 7-44-2.

"ஆனணேந்து ஏறும் குறிகுணம் ஆரறிவார்." (4-90-5) என அப்பர் பெருமானும்,

"மால்விடை கோடல் செய்த குறிப்பினுர்:" (1-56-7) எனச்

சம்பந்தரும் பெருமான் விடை ஏறுங் காரணத்தைக் கூருது குறி, குறிப்பு என்னும் சொற்களொடு வாளா விடுத்தனர். ஆனுல் "அறிவாற் சிவனே" எனப் புகழப் பெற்ற மணிவாசகரோ பெருமான் ஏன் விடையேறுகின்ருர் என்னும் வினுவையும் எழுப்பி, அதற்குரிய விடையையும் பின்வரும் பாடலில் விளக்கி யுள்ளார்.

"கடகரியும் பரிமாவும் தேரும்உகந் தேருதே
இடபம்உகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ!
தடமதில்கள் அவைமுன்றுந் தழலெரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கிஞன் திருமால்காண் சாழலோ."
– திருச்சாழல். 15.

திரிபுரத்தை அழித்தற் பொருட்டு தேவர்கள் சமைத்த தேர் நிலை குலைந்த காலத்தில் திருமால் இடபமாகி இறைவனுக்கு ஊர்தியாயினர், என்பது புராண வரலாறு.

2. சிவபிரான் ஏறும் ஏற்றின் வர்ணனை:

அந்த ஏறு-அழகியது, கடியது, தூயது, பெரியது, வலியது, இணையில்லாதது, கொம்புடையது, சினமிக்கது, செண்டாடுவது, செங்கண்ணது, தறுகண்ணது, புகருடையது, பைங்கண்ணது, வெங்கண்ணது, பொலிவுடையது, போர்க்குற்றது, மாசில்லா தது, வீரங்கொண்டது, விளையாடுவது, வெண்ணிறத்தது, ஆடல்புரிய வல்லது, இடிபோன்ற குரலை உடையது, இளமை கொண்டது, கடுநடையது, தொலையாப் பீடுடையது, மணி-அரசிலை மாலை இவைதமை அணிந்துள்ளது, வெள்ளிமலை போன் றது, வேகமாய்ப் பாயவல்லது, பனிமால் வரை (இமயம்) போன்றது, திமில் உடையது.

3: ஏற்றின் பிற பெயர்கள்:

இடபம், எருது, சே, புல்லம், பெற்றம், பெற்று, விடை.

'இடபம் ஏறுவர்' – சம்பந்தர். 3-78-1.
'எருதே இனிது ஊர்வர்.' – சம்பந்தர். 1-95-2.
'சேவதேறிய செல்வன்.' – சம்பந்தர். 3-5-7.
'புல்லம் ஏறுவர்.' – சம்பந்தர். 2-91-6.

‘பெற்றம் ஊர்ந்த........பெம்மான்.’ – சம்பந்தர். 1-1-2.

‘பெற்றேறும் பெருமானுர்.’ – சம்பந்தர். 3-64-10.

‘ஊர்வது பேர் விடை.’ – சம்பந்தர். 1-36-10.

4. பிற ஊர்திகள்:

(1) ஆ, ஆன், கோ, பசு.

‘ஆக்களேறுவர்.’ – அப்பர். 5-42-3.

‘ஆன் அலாது ஊர்வதில்லே.’ – அப்பர். 4-40-1.

‘கோவின் மேல்வரு கோவினே.’ – சுந்தரர். 7-68-1.

‘பசுபதி அதன்மிசை வருபசுபதி.’ – சம்பந்தர். 1-22-5.

(2) வேதம்:

வேதமால்விடை ஏறவல்லானே; – சுந்தரர். 7-57-3.

குறிப்பு :

“வேதவாரண மேற்கொண்டிருந்தன.”
– பெரியபுராணம். தடுத்தாட். 194.

“மறையே நமது வாகனமாம்.” திருவிளே. உலவாக்கிழி. 9

விடை பிரணவ ரூபத்தது என்பது “ஒவணம் ஏல் எருது” என வருவதில் காணலாகும். (சுந்தரர். 7-5-10)

(3) யானே:

‘வெள்ளிமால்வரை போல்வதோர் ஆனையார்.’–அப்பர். 5-37-2.

சிவபிரானுடைய யானேயின் பெயர் அயிராவணம்*

“அயிராவணம் ஏருது ஆனேறு ஏறி.” – அப்பர். 6-25-1.

“தொளேக்கை வேழத்தர்” – அப்பர். 5-26-6.

---

* அயிராவணம்:– இது கயிலாயத்து யானே. இரண்டாயிரம் கொம்புகளேக் கொண்டது; வெண்ணிறத்தது; பிரணவ ரூபத்தது; சுந்தரரை அழைத்துச் சென்றது.

“நிரைநிரை ஆயிரம் வகுத்த மாயிரு மருப்பின்
வெண்ணிறச் செங்கண் வேழமும்.”– கோயில் நான்மணிமாலே 4.

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

(4) மேகம் :

மேக நல்லூர்தியர். – அப்பர் 4-16-2.

வியன் கொண்டல் மேற்செல் விகிர்தர். – அப்பர் 6-16-4.

மங்குல் திரிவாய் – சுந்தரர் 7-47-2.

குறிப்பு : திருமால் மேக வாகனமானது: "பாரொடு விரிஞ்சன் தன்னைப் படைத்திடப் பன்னுள் மாயன், காரென வந்து முக்கட் கடவுளைப் பரித்ததேபோல்"
– கந்தபுராணம், சூரன்வதை. 502

"நாரணன் தாமரை யாளியாதி, உலகேழையும் ஈன்றிடும் ஆசையின் உம்பர்கோனைப், பலநாள் முகிலின் உருக் கொண்டு பரித்தல் செய்தான்" "மாலோய்!..........
சுரராண்டினில் ஆயிர ஆண்டு.........இம்மேக
உருக்கொடு தாங்கினை எம்மை வேண்டும்.........
வரம் நல்குதும் ஓதுதி"
– காஞ்சிப் புராணம் புண்ணிய கோடீ. 3, 4.

(5) மால்*

"மால்விடை இட்டமாய் உகந்தேறும் இறைவனுர்."
– அப்பர் 5-6-7.

"மாலெரி சரத்தானைச், சரத்தையும் தன் தாட்கீழ் வைத்த தபோதனனை." – அப்பர் 6-50-9.

---

*......மாயிரு ஞால வயிற்றேறும்– (உலகை உண்ட திருமாலாகிய இடபம்)–திருக்கழுக்குன்றத்து உலா. கண்ணி. 257–258.

(முன் பக்கத் தொடர்ச்சி)

"இரண்டாயிரம் கோட்டு வேழமும்
தண்டுமாய் மால் விடை."
– பழநித் தலபுராணம்–திருமணச் சருக்கம் 14.

"வான்கோடிரண்டாயிரம் வாய்த்ததனை
ஆளும் பிரானை."
–அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ்–வருகைப்பருவம்4.

"துங்கமணிக் கோடிரண்டாயிரம் படைத்தகரி."
– பேரூர்ப் புராணம்.

"கோடிரண்டாயிர வேழமும்," – மரகதவல்லி துதி.

(6) உணர்வு :

உணர்வென்னும் ஊர்வ துடையாய் போற்றி – அப்பர் 6-57-6
"மூவாத சிந்தையே மனமே வாக்கே தன் ஆனையாப் பண்ணி ஏறினானே." – அப்பர் 6-63-1.

5. ஊர்தியைப் பற்றி நகைச்சுவைப் பகுதி

(1) உழுவார்க்கரிய விடையேறி (உழவர்களுக்கு கிடைத்தற் கரிய எருது) சுந்தரர் 7-42-6.

2. "திருமுருகன் பூண்டி வேடுவர் ஆறலைக்குமிடம் என்பது தெரிந்தும், பெருமானே! உம்முடைய ஏற்றின் கால் ஒடிந்து போக இல்லை என்றால் வேறு எங்கேனும் போகாது ஏன் இங்கு இருக்கின்றீர்?" என வேடுபறி கொடுத்த சுந்தரர் வினவு கின்றனர்.

"ஏறுகால் இற்றதில்லையாய்விடி லெத்துக்கிங் கிருந்தீரெம் பிரானிரே." சுந்தரர் 7-49-4.

6. ஏற்றின் மேல்வருங் கோலம் :

(1) தேவியுடன் வருவார் :

உமையொடு பெற்றம் ஏறுகந்தேறும். – அப்பர் 5-24-5.
"வருவார் விடைமேல் மாதோடு மகிழ்ந்து." – சுந்தரர் 7-53-1

(2) எலும்பணிந்து ஏறு ஏறுவர்; விடையேறிப் பலிதேர்வர்.

"என்பணிந்து ஏறேறும் ஈசர்" – சுந்தரர் 7-7-57
"விடையொன்றது ஏறிப் பலிதேர்ந்துண்ணும் பரமேட்டி" – சுந்தரர் 7-53-3.

(3) பூதப்படை சூழக்கொன்றைமாலை சூடி, பிறைசூடி விடை மேல் மாணிக்கமலைபோல் வருவார்.

"மருவார் கொன்றை மதிசூடி மாணிக்கத்தின் மலைபோல
வருவார் விடைமேல் மாதோடு மகிழ்ந்து பூதப் படைசூழ."
– சுந்தரர் 7-53-1.

7. உபதேசம் :

(1) இறைவனுடைய ஊர்தியாம் ஏற்றினைப் போற்றிப் பேசு வோமாக:

"புல்லம் பேசியும் பூந்துருத் திந்நகர்ச் செல்வன் சேவடிக்கீழ் நாமிருப்பதே." – அப்பர் 5-32-6.

8. இடபவாகன தரிசனத்தின் போது பாடவேண்டிய பாடற் பகுதிகள்.

(1) "பாசமான களைவார் பரிவார்க் கமுத மனையார்
ஆசைதீரக் கொடுப்பார் அலங்கல் விடைமேல் வருவார்."
– சம்பந்தர். 2-80-7

(2) "மற்றொன் றிணையில் வலிய மாசில் வெள்ளி மலைபோல்
பெற்றொன் றேறி வருவார் அவரெம் பெருமான் அடிகளே."
– சம்பந்தர். 2-50-8.

(3) "கொம்படுத்ததொர் கோலவிடை மிசைக் கூர்மையோ,
டம்படுத்த கண்ணாளொடு மேவல் அழகிதே."–
– சம்பந்தர். 2-3-3.

---

# OUR POETIC HERITAGE

## *The Folly Of Set Opinions*

YOU may boldly take a gem from the jaws of a crocodile,
you may swim the ocean with its tossing wreath of waves,
you may wear an angry serpent like a flower in your hair,
but you'll never satisfy a fool who's set in his opinions!

YOU may, if you squeeze hard enough, even get oil from sand,
thirsty, you may succeed in drinking the waters of the mirage,
perhaps, if you go far enough, you'll find a rabbit's horn,
but you'll never satisfy a fool who's set in his opinions!.

**BHARTRIHARI**

# பிரம்மசரியமும் ஞானச் சக்திகளும்

சுவாமி பரமாத்மாநந்தர் அவர்கள்

பிரம்மசரியத்தின் மாண்பை மெய்யாகவே நன்குணர்ந்து, அதனைத் தக்கவாறு ஓம்பிவரும் நாடு நம் பாரதமா நாடே என்னில் அது உண்மையுரையே யாம். மேலை நாட்டினர் அவ் விரதத்தினுல் விளையும் ஒழுக்க விழுப்பத்தை ஓரமாட்டாதவரா கின்றனர். ஆடவர்க்காயினும் மகளிர்க்காயினும் பெரும் பாலார்க்கு அது பழகுதற்கு இயலுவதன்று என்று முதற்கண் மேலை நாட்டினர் இயம்புவர்; அம்மட்டோ! பெரும்பாலார் அவ் விரதத்தைக் காக்க முற்படுவரேல், பிணிகட்கும், நரம்புக் கோளாற்றுக்கும் ஆளாவது திண்ணம் என்றும் கூறுவர். காம இச்சையை அடக்குதல் பெருந் தீங்கு விளைக்கும் என்று அன்னுர் கருதுகின்றனர். பிராய்ட் என்னும் உள்ளப் பகுப்பு நூலார் அத்தகைய அடக்கத்தைக் கண்டித்து, அதனுல் விளையும் ஊறுகள் பலவற்றை நீண்ட வரிசையாகக் கூறுகின்றனர். ஆங்கிலக் கல்வியை விரும்பிப் பருகியுள்ள நம் நாட்டினரும் மேற்றிசை யாரது கருத்துக்கு இசைவு கூறுவார் போல் உள்ளனர். நிறையும், பிரம்மசரிய விரதமும் மனித இயலுக்கு மாறுனவை என்றும், பழகுதற்கு இயலாதவை என்றும், சில கல்விகற்ற பேதையர் கருதத் தொடங்கி யுள்ளனர். துறவுக்கும் பிரம்மசரியத்திற்கும், ஆன்ம ஞானத்திற்கும் மிகச்சிறந்த தாயகமாகிய இப்பரதமா நாட்டிலும் இங்ஙன் நிகழ்வதே என்பது பெருவிந்தைக்கு இடமாகின்றது; பல்லாயிரக்கணக் கான ஆண்டுகளாக ஈண்டுக் குடிகொண்டுறையும் சாதன முறையும், பெரியோரது ஒழுக்க முறையும் இவர்களது அற்ப ஐயத்தையும் கோழைத் தனத்தையும் ஒழிக்கப் போதிய வலியுற்ற துணிவான மறுமொழிகளாகா போலும்! சாதாரண மனிதனுக்கும் பிரம்மசரியம் பேரளவிற்கோ குறுகிய அள விற்கோ பழகுதற்குரியதுமன்றி, உண்மையான பேராண்மையை எய்துதற்கும், மக்கட்குரிய விழுமிய விதியை நிறைவேற்று

தற்கும் உறுதியான ஒரே சாதனம் அது என்றும் நமது நாடு நாக்கடிப்பாக வாய்ப்பறை அறைகின்றது. இதில் அஞ்சுவது யாதொன்றுமில்லை, விளையும் தீங்கும் யாதுமில்லை. காரணம் யாதெனின், பிரம்மசரியம் என்பது காம விழைவை வலிந்து பற்றி அடக்குவதாகாது, அதனை அறவே நீக்குதலேயாம். பிரம்மசரியப் பழக்கம் என்னும்போது, உடலளவாக மட்டும் தடைப்படுத்தலில் அடங்கி விடாது, சிறப்பாக மனத்தளவான அடக்கமுறையிலே முடிவதாகும். இம்மன அடக்க மின்றிப் பிரம்மசரிய விரதம் பயனற்றதாகும்; ஊறு விளைப்பதாகவும் ஆதல் ஒல்லும். மன அடக்கம் என்பது வாழ்க்கையை ஞான நிலையினின்று நோக்குதலையும், சமூகத்திலே ஆன்மிக ஞானம் கமழ்தலையும் உள்ளிட்டதாகும். நம் நாட்டிலே இவ்விரண்டு துணைகளும் ஏராளமாகப் பெறப்படுவனவே. பிள்ளைமைப் பருவத்தினின்றே, அறிவு வளரும்போதே, மன அடக்கமும் பயிலப் படல்வேண்டும். இதற்கென்றே பிரம்மசரிய நிலையை நால்வகை நிலைகளுள் முதலாவதாகக் கொண்டனர் ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்.

சிரத்தையொடு ஆன்மிக ஞான வாழ்க்கையிலே இறங்கத் துணியும்போதே பிரம்மசரியத்தின் இன்றியமையாமை ஒருவர்க்குத் தெற்றென விளங்குவதாகும். ஊனைப்பற்றியெழும் சிற்றின்ப நுகர்ச்சியை அவாவும் போதே ஆன்ம இன்பத்தைப் பெற எண்ணுதல் பேதைமையேயாம். இருளும் ஒளியும்போல் அவை இரண்டும் ஒன்றோடொன்று முரண்பட்டனவாம். பயன் தரும் ஞான முன்னேற்றம் கைகூட வேண்டின், இடையறுத பிரம்மசரியம் முற்றிலும் இன்றியமையாததாகும். இதற்கு ஒரு காரணம் வெள்ளிடை விலங்கலெனத் தெள்ளிதில் எவர்க்கும் புலனாகும். இறைவனைப் பற்றிய சிந்தனையாலும் ஏனைய ஞான சாதனங்களாலும் உண்டாக்கப்படும் மிகப் பெரும் மாறு பாட்டைக் காமநினைவாலும் நுகர்ச்சியாலும் சீரழிந்த மூளையும், அதையொட்டிய நரம்பு மண்டலமும் தாங்கவொண்ணாதனவாம். பிரம்மசரியத்தைக் கடைப்பிடியாத ஒருவனது மூளையும் நரம்பு மண்டலமும் மேலெழுந்த பார்வைக்கு எத்துணை நலமும் பலமும் படைத்துள்ளனவாகத் தோன்றினும், ஆழ்ந்த தீவிர ஞானத்

தினை நீடிக்கச் செய்யும் திறனற்றனவாகும். அவன் சிறிதள விற்கு முன்னேறல் கூடும் எனினும், அதற்கப்பால் அடி யெடுத்து வைக்கும் ஆற்றல் குன்றியவனுவான்.

ஆனல் உடலியலை யொட்டிய இக்காரணம் சிறப்புடைய தொன்றன்று. முதன்மையான காரணம் மன இயலைப் பற்றியதேயாகும். உயர்வற உயர்ந்த பகுதியிலே பெறும் ஞானக்காட்சியாவது, ஒருவன் தன்னை உடலுக்கும் மனத் திற்கும் அப்பாலான தனி உணர்வுமயமானவனுகக் காணுதலே. காண்பானது நிலையினின்று இக்காட்சியின் இயல்பை நோக் கின், உடல்-மனஉணர்விற்கு அப்பாலான உணர்வாக மிளிரும்; காணப்படும் பொருளின் நிலையினின்று நோக்கின், நேராக இறைவனைக் காணலும், உலகினை இறைவனுகவே காணலும் ஆகும். ("பரத்தில் மறைந்தது பார்முதற் பூதமே" என்னும் திருமந்திர வாக்கியம் இங்கு நினைவுறத் தக்கது.) ஒரே ஞானக் காட்சியின் இருபகுதிகளே இவை. நம்பால் மனஅடக்கம் ஓங்கிவருங்கால், ஒருபுறம் நம்மைப் பற்றிய காட்சியும், மறு புறம் உலகினைப் பற்றிய காட்சியும் ஒரே அமயம் மாறுபா டடைந்து வருகின்றன. நம்மை ஆன்மாவாக மேன்மேலும் உணரும் தன்மையும், உலகையும் மேன்மேலும் பரம்பொரு ளாகக் காணும் இயல்பும் தொடங்குகின்றன. மனத்தின் மாறு பாட்டோடு, இன்னெருவகை மாறுபாடும் உடன் விளைகிறது; அது யாதெனில், நமது முயற்சியிலும், உடலின் தொழில்களி லும் ஒரு மாறுபாடு காணப்படுகின்றது. ஆக நாம் ஞான முன்னேற்றத்தை நால்வகையான மாறுபாடாகக் கருதலாம்— உள்ளத்திலும், உடலின் தொழில்களிலும், தன்னைப் பற்றிய உணர்விலும், புறப்பொருளின் மெய்ம்மையிலும் நிகழும் மாறு பாடாகக் காணலாம். அன்றியும், நமது இப்போதைய சாதாரண நிலையினின்று பரம்பொருட் காட்சியை எய்தும் நிலை வரை அடையும் ஞான முன்னேற்றத்தினை மூன்று படிகளாக வசதி கருதி வகுத்துக் கொள்ளலாம். இம்மூன்று படிகளிலும் முறையே விளையும் நால்வகை மாறுபாடுகளை உற்றுநோக்கு வோமாயின், ஞானவாழ்விற்குப் பிரம்மசரியம் பல்லாற்ருனும் இன்றியமையாததாதல் எளிதே புலப்படலாகும்,

முதலாவதான சாதாரண நிலையில், நமது மனம் உடலைப் பற்றிய விழைவுகள் நிறைந்திருப்பதாகும். உடலைப்பற்றிய இன்ப நுகர்ச்சியை நாம் அவாவுகிறோம். உலகியற் செல்வங்களையும் அதிகாரத்தையும் ஆவலோடு நாடுகிறோம். உள்ளம் பலப்பல உடலைப்பற்றிய அவாக்கட்கும், உலகியற் பேராசைகட்கும் உலோபம், பொறாமை, பகை, ஆணவம், புகழாசை முதலியவற்றிற்கும் விளையாடும் இடமாய் அமைகிறது. உடலைப் பற்றிய தொழில்களில் இணைவிழைச்சே உயிர்கள்மிகவும் விரும்பும் நுகர்ச்சியாகிறது. நாம் நம்மை உடலாகவும் மனமாகவும் பெரும்பாலும் உணர்கிறோம். ஆன்மாவாக உணர்வது மிகமிக அரிதேயாகின்றது. புறத்துள்ள உலகம் ஒன்றுக் கொன்று தொடர்பற்ற, வெவ்வேறான சடப்பொருள்களையும் உயிர்களையும் பற்றிய நிகழ்ச்சிகளின் தொகுதியாகவே தோன்றுகிறது; உயர்ந்த பேருண்மைகள் நமக்கு அறியப்படாதனவாயும் இல்லாதனவாயும் ஒழிகின்றன. மனஅடக்கத்தின் வாயிலாக நாம் அடுத்த படியை நண்ணும் போது, உள்ளம் பற்பல தாபங்களினின்றும் விடுபட்டுத் தூய்மை அடைகிறது. பேராசை, பொறாமை, அதிகார ஆசை, உடலின் விழைவு-இவை இப்போது நீங்கிவிடுகின்றன. இயற்கைக்கு அப்பாலான விண்ணக ஒளியின் காட்சி வந்தடைகின்றது. மனம் உலகமுயற்சிகளைத் தள்ளிவிட்டு, ஞான உலக உண்மைகளைச் சிந்திப்பதில் இன்பம் நுகர்கின்றது. உடலுக்குரிய தொழில்களும் தூய்மை யடைகின்றன. சுவை மிகுந்த உணவின் மீதுள்ள விருப்பம் குறைகின்றது; உடலைப் பற்றிய போகவசதிகளிலும் உவர்ப்பு மிகுகின்றது. உடல் முயற்சியினும் மனமுயற்சி உகந்த தாகின்றது. உள்ளம் நெஞ்சமெனும் பிரதேசத்தினைத் தன் உறைவிடமாக்கிக் கொள்கிறது. தாழ்ந்த உணர்வுகளுக்குரிய நரம்பும் நரம்பு முடிச்சுகளும் விரிக்கும் வலையினின்றும் விடுபட்டு எழுந்து, நெஞ்சகத்தைச் சார்ந்த நரம்பு முடிச்சு எனும் மாளிகையில் குடியிருக்கின்றது. தாழ்ந்த நரம்புகட்குரிய உணர்ச்சிகள் அதனை எளிதே கீழ் இழுக்க இயலாதனவாகின்றன.

உடலினும் உள்ளத்தினும் நுண்ணியதான ஒன்றாக நம்மை உணர்கிறோம். ஆன்மக் காட்சி நமக்கு மின்னெனத் தோன்றி

மறைகின்றது. உடல் வாழ்வு, சாதாரண இயல்பான வாழ்வெனப் பெயர் பெறுவது, முன்போன்று அத்துணை உண்மையுள்ளதாகத் தோன்ருது போகிறது; அவ்வாழ்விற்குரிய அவாக்களும் முன்னினும் பேரளவிற்கு மெலிவடைகின்றன. புறஉலகமும் மாறுபாடடைந்ததாகத் தோன்றுகிறது. பொருள்கள் தொடர்பற்ற வெவ்வேறு உண்மைகளாகப் புலப்படுவதில்லை. அவையனைத்திற்கும் ஆதாரமாயும், அவற்றை ஊடுருவி நிற்கும் சாரமான பொருளாயும் அமைந்த ஒருமையொன்று தோற்றம் அளிக்கின்றது. இடையிடையே சில அரிய வேளைகளில் அந்த ஒருமைப் பொருளின் உணர்வு தடிப்படைந்து, தெளிவாக ஆழ்ந்த நிலையில் அதனைப் புலப்படுத்துகிறது. நமது சாதாரண உணர்விற்கு இலகும் உண்மையினும் மிகச்சிறந்த, எங்கும் பரந்த அளவற்ற பேருண்மையினைத் தெரிவிக்கும் பலப்பல அத்தனை வடிவங்களாகவே உலக நிகழ்ச்சிகள் தோன்றுகின்றன. உலக முழுவதுமே பயனற்ற வடிவங்களின் தொகுதியாகக் காட்சி தர, அவற்றுக்குப் பின்னே மெய்யான ஒரு பரம்பொருள் எல்லையற்றதாக ஒளிர்கின்றது; அப்பரம் பொருளை உள்ளம் தானுகவே அணுகுகிறது. ஆனுல் பால்வேற்றுமையுணர்ச்சி இன்னும் மறையாது நிற்கிறது. உண்மையாதெனின், அது முன்னினும் பன்மடங்கு நுண்ணியதாகி வலிமையுற்றதாகி நிற்றலின், உலைவின்றித் தாழாது அதனை எதிர்த்துக் கடும்போர் புரியவேண்டுவதாகிறது. அது நுண்ணிய, வஞ்சனை மிக்க வடிவங்களோடு முன் வருகின்றது; மனித உள்ளத்தினை எத்தனை நினைத்தற்கரிய சூக்கும மான வழிகளில் தனது கண்ணியிற் படுத்த முயல்கின்றது என்பது அறியப்படுகின்றது. தூல உடலைப்பற்றிய அதன் பகுதி மிகமிக அற்பமானதே. பெண்ணுருக் கொண்ட எதன் மீதும் எழும் கவர்ச்சிக்கு வேராவது, பாலுணர்வை யொட்டிய இயற்கைச் சார்பே (இயல்பூக்கமே). ஆனுல் இச்சமயம் உள்ளம் அதனேடு நெருங்கி நின்று மற்போர் புரியும் நிலையிலுள்ளது. முன்னினும் பயன்சிறக்க அதனேடு மலையவல்லதாகிறது. இடையிடையே (ஆண்-பெண் வேறுபாடு ஆகிய) பாலுணர்ச்சித்துறையில் வழுக்கி வீழ்தலும் நேர்கின்றது. அக்காலங்களில் மிகக் கூரிய துயரம் உள்ளத்தை மணிக்கணக்காகக் குடைகின்றது. நினைவாலோ செயலாலோ அவ்வாறு

வழுக்கி விழ்தலின் பயனாக, உள்ளம் இப்போது பேரவாவொடு சிந்தித்துப் பரம்பொருளிடம் உறைய விழையினும், காட்சி மேகத்தால் மறைக்கப்பட்டது போல் ஆகின்றது. நரம்புகள் கட்டுக்குலைந்தனபோல் தோன்றுகின்றன; மாசு மறுவற்று ஒளிர்ந்த காட்சியை மீண்டும் பெறுமுன் சிறிது காலம் கழிந்தே தீர்கிறது. இவ்வண்ணம் சாதகன் பாலுணர்ச்சி பற்றிய எதனின் நிழலையும் அஞ்சுபவனாகிறான். பாலுணர்ச்சியினின் றும் வெகுதொலை விலக விலக, ஞானநிலையினை மிகமிக அணுகு பவராகிறோம்.

பின்னர் நாளடைவில் நாம் மூன்றாவதான இறுதிநிலை யினை நோக்கிச் செல்கிறோம்; அதுவே ஆன்ம யாத்திரை யின் முடிவுமாகும், அதனை அணுக அணுக, உள்ளம் மேலும் மேலும் தூயதாகிறது, உலகியல் மாசுகள் அனைத்தும் பையப் பையக் கழன்று விடுகின்றன. காமத்தின் தூண்டுதல் மிக நுண்ணிய வடிவங்களிலும் எழ வழியின்றி மாய்ந்து விடு கின்றது. மேலும் மேலும் ஆன்மாவாக நம்மை நாம் உணர் கிறோம்; சில சமயம் உடல்—மனஉணர்ச்சியை முற்றும் கடந்து அப்பாற் சென்று விடுகிறோம். நம் வெளிமுயற்சிகள் அனைத் தும் உதிர்ந்து விடுகின்றன. உடலைப்பற்றிய தொழில்கள் உடலைக் காத்தலளவாக ஒடுங்கி விடுகின்றன. காம நுகர்ச் சியோ முற்றும் மாய்ந்து விடுகின்றது. பாலுணர்ச்சியினின் றும் எழும் நினைவின் நிழலும் கூரிய துயரை விளைக்கின்றது. உள்ளம் நினைவெனும் அலை யாதொன்றும் இன்றியதாய் மிக நுண்ணிய நிலையினை எய்துகின்றது; செம்பொருளாம் பரஞ் சோதிக் காட்சியில் இடையறாத பேரின்பப் பரவசப்பட்டு, அதில் நிலையாக நிற்கிறது. ஆன்மாவிலே ஆனந்தமும் சாந்தமும் அன்பும் நிறைகின்றன. வடிவங்கள் மிக்க உலகம் மனத்தின் அடிவானத்தின் விளிம்பிலே மிக்கதொலைவில் அமையும் ஒரு புள்ளியனைய மாசுபோலத் தோற்றமளிக்கின்றது; நமக்கு உள்ளும் புறமும் இறைவனே உறைகின்றான். இவ்வாறு படிப் படியாக நினைவையும் உண்மையையும் கட்டுறுத்தும் எல்லா வரையறைகட்கும் அப்பாற் சென்று, பரம்பொருளோடு ஒன்றி விடுகிறோம். இதோடு ஆன்ம யாத்திரை முற்றுப் பெறுகிறது.

மனிதனது ஞானமுன்னேற்ற நெறியின் உண்மை இது வாயின், காம நுகர்ச்சிக்கு அதில் என்ன இடம் உண்டு? அதனை அடக்கி வேரொடு மாய்க்காவிடில், முதற்படிக்கு அப்பால்,எவனும் செல்லவொண்ணுது என்னலும் மிகையாம். இரண்டாம் படியில் இடுக்கணின்றி வாழ வேண்டின், காம நுகர்ச்சியைப் பற்றிக் கூறுவானேன்? காம நினைவும் இயலாததாகும். மெய்ஞ்ஞானம் பெறும் கனவு காண்பவனுய், அதே சமயம் காம வாழ்க்கையையும் விடாது பற்றுவானுயின் அவன் மெய்யாகப் பேதையே யாவான், இரங்கத்தக்க பேதையே யாவான். யாம் முன்னர்க் கண்டவாறு, காமத்தோடியைந்த வாழ்வு உலகியல் வாழ்வுடனும் உடலுணர்ச்சியோடும் அவை வருவதாகும். ஒரேவகை இருப்பு நிலையின் பல பகுதிகளாகும். காம நினைவுக்கும் காமப் பழக்கங்கட்கும் ஆட்பட்டொழுகும் உள்ளம் தாழ்ந்த எண்ணங்களோடு இறுகப் பிணைக்கப் பட்டுள்ளதாகும். அத்தகைய உள்ளம் உயர்ந்த நலங்கட்குரிய உண்மைகளைக் காணும் ஆற்றல் ஒரு போதும் வாய்ந்ததாகாது. தாழ்ந்த எண்ணங்களைச் சார்ந்த நரம்புகளின் முயற்சி யாதேனும் நினைவாலோ, சொல்லாலோ, எழுமாயின் உயர்ந்த காட்சியினை இழந்தே தீரவேண்டும், அது மறையவே செய்யும். மெய்ப்பொருட் காட்சியைப் பெற வேண்டின் காம வாழ்வை நீத்தல் கட்டாயம்; வேறு வழி இல்லை.

ஞான முன்னேற்றம் பெற எளிய வழிகளை நாடுதலும், உயர்ந்த இலக்கியங்களை நமது இயல்பிற்கியையத் தாழ்த்தி வைத்தலும் மனித இயல்பேயாம். ஞானக் குறிக்கோள்களில் நம்பிக்கையின்மை இந்நாளைய யுகத்தின் சிறப்பான குறையாகும். ஞான வாழ்வையும் மெய்ப்பொருளையும் முழு மனதோடு நாடாத காரணத்தால் பிரம்மசரியத்திற்கு ஏற்ற மதிப்பை இந்த யுகம் அளிப்பதில்லை. சாதாரண இயல்பான வாழ்வில், மெல்லிய அறிவு மினுக்கம் பூசப் பெற்ற, விலங்கியலையே பெரும் பகுதியாகக் கொண்ட வாழ்வில் அது திருப்தியடைகிறது. ஆனுல் வாழ்க்கையின் உயர்ந்த இலட்சியங்களை அங்ஙனம் இழிவு படுத்தலின் விளைவாக வாழ்வு தண்ணியதாகி வந்துள்ளது. காம வாழ்வின் சிக்கலும், இல்லற வாழ்விலும்,

சமுக வாழ்விலும் அதன் இன்றியமையாத தீய விளைவுகளும் கழிபெரும் அளவிற்கு ஓங்கியுள்ளன. அவற்றினின்றும் தப்பிப் பிழைக்க வசதியான நெறிகளை நாடுகின்றனர். பிரம்மசரியம் எனும் குறிக்கோளை ஒப்புக்கொண்டு கைப்பற்றினாலன்றி மேலை நாட்டினர்க்கு உய்வில்லை என்பது திண்ணம். ஞானத்தை அடிப்படையாகக் கொண்டு தனி வாழ்வையும் சமுக வாழ்வையும் திருத்தி அமைத்தாலன்றி மக்கள் பிரம்மசரியத்தைப் பற்ற விழையார். மேலை நாட்டிலே இவ்வாறிருக்க, நம் பரதக்கண்டத்தும் மேலை நாட்டினரைப் பின்பற்றி வரும் ஒரு சில கல்வியாளர் உயர்ந்த ஞானக்குறிக்கோளையும் நாகரிகமாயுள்ள சிற்றின்ப நுகர்ச்சியையும் ஒருங்கே இணைத்து விடும் பொருட்டு அறிவாற்றல் முழுமையும் வீணாக உய்த்து வரும் திறத்தையும் கண்டு இறும்பூதெய்துகிறோம்.

---

இராகம் : கல்யாணி தாளம் : ஆதி

பல்லவி

சரவணபவ குருபரனே வா (சரவ)

அனுபல்லவி

பரம கருணாகரனே உனைப்போல்
பாரினில் எங்குமே கண்டதில்லை—சிவ (சரவ)

சரணங்கள்

1) ஜெகம் புகழும் நின்சேவடி நம்பினேன்
திகழும் கூர்வடிவேலையே அண்டினேன்
புகழும் நின்னருள் என்றுமே வேண்டினேன்
குகனே தயவாய்க் குறைதீர்த் தருள்வாய் (சரவ)

2) பாதிமதியைத் தன்தலையில் அணிந்து
ஜோதி முடியுடன் துலங்கும் ஐயனின்
வேதங்கள் போற்றிடும் விண்ணோர் புகழ்ந்திடும்
நாதஸ்வருபனின் மகனே ஐயனே (சரவ)

வி. கே. முத்தையா பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
வண்ணார்பேட்டை, திருநெல்வேலி-3.

# ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமானின் அரிய பண்பும் தொண்டும்

திரு. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள்

யாழ்ப்பாணம் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரைப் பற்றிச் சிறிதேனும் அறியாதார் சைவ உலகில் ஒருவருமிரார். எனினும், பரபரப்பும் புல்லிய நாட்டமும் மிகுத்துவரும் இக்காலத்தில் இவரைப் போன்ற தமிழகச் சமயப் பெரியோர்கள் சரிதங்களை விவரமாய் அறியவும், அவர்கள் புரிந்த தொண்டுகளைப்பற்றி நினைந்து போற்றவும் போதியவளவு வாய்ப்புகள் கிடைப்பதில்லை. நீதிகளையும் சமயப் பேருண்மைகளையும் பற்றி நூலளவில் அறிந்து பேசுவதோடு அமையாது, அவைகளைத் தம் வாழ்க்கையால் விளக்கி உலக நலம் காத்த பெரியோர்களின் சரித்திரங்களையும் போதனைகளையும் விவரமாக அறிதல், நற்பண்பு வளர்ச்சிக்கு எக்காலத்தும் இன்றியமையாததாகும்.

சமய உலகில் பலகோளாறுகள் ஏற்பட்ட 19ம் நூற்றுண்டில் அவதரித்த ஓர் அரிய தலைவர் நம் நாவலர் பெருமான். அவர் செய்துள்ள பணிகள் என்றும் மறவாது போற்றற்குரியவை. ஆறுமுகநாவலர் சரித்திரம்[1] என்னும் நூலில், அவர் வாழ்க்கை வரலாறும், அவரது அரிய பண்புகளும், செய்து முடித்த அறிவுத் தொண்டுகளும் விளக்கமாகக் கூறப்பட்டு உள்ளன. இவை, இந்நாளிலும், சிறப்பு வகையால் சைவ சமுதாயத்திற்குப் பெரும் பயனளிக்க வல்லவை. அவற்றுட் சிலவற்றை இங்குக் காணமுயலலாம்.

---

[1] இதன் ஆசிரியர், யாழ்ப்பாணத்து நல்லூர் த. கைலாசம் பிள்ளை அவர்கள். இது 117+65 பக்கம் கொண்டது.

நாவலர் காலத்திற்கு முன்பு போர்த்துக்கீசியர் ஆட்சி இலங்கையில் நடந்த போது, பெரிய சிவாலயங்கள் பல இடித்து விடப்பட்டன. மக்களிற் பலர் கத்தோலிக்கராக மாற்றப் பட்டனர். பின்பு அவர் அவதரித்த 19ம் நூற்ருண்டில் இலங்கை ஆங்கிலேயர் ஆட்சிக்குட்பட்டிருந்தது. நம் நாட்டுச் சமயத்திலும் தமிழிலும் அவமதிப்பும், ஆங்கிலத்தில் மோகமும், பாதிரிமார் இந்துக்களைக் கிறிஸ்துவராக மாற்றும் வேகமும் பெருகிவந்தன. இந்துக்களும் தமது பண்டைய நற்பண்பு களிலிருந்து வழுவிப் பலவீனர்களாய், ஒற்றுமையுணர்வும் வீரமும் குறைந்தவர்களாகி வந்தனர். இத்தீமைகளைத் தடுக்கப் பாரத நாட்டின் வடக்குப் பகுதியிலும் தெற்குப் பகுதியிலும் சமயத்துறைத் தலைவர்கள் சிலர் அவதரித்தனர். அவ்வாறே இலங்கையில் அவதரித்தவர் நம் நாவலர் பெருமான்.

இவர், யாழ்ப்பாணத்திலுள்ள நல்லூரிலே கார்காத்த வேளாளர் மரபில், பாண்டிமழவர் குடியில் வந்து உதித்தார். இவர் தந்தையார் கந்தப் பிள்ளை, பரம்பரையாக வந்த தமிழ்ப் புலமை, பிறமொழிக்கல்வி, அரசாங்க உத்தியோகம், செல்வம், செல்வாக்கு முதலிய நலங்களுடன் விளங்குபவர். தாயார் சிவகாமியம்மையார். பிறந்த நாள் 18—2—1822.

ஆறுமுகனர் பல புலவர்களிடம் இலக்கிய இலக்கண நூல்களைக் கற்ருர். பின்பு, பீடர் பெர்ஸிவல் என்னும் பாதிரி யார் நடத்திய ஆங்கிலப்பள்ளியில் சேர்ந்து விரைவில் அம் மொழியிலும் திறமை பெற்ருர். இவரது இரு மொழித்திறமை யையும் கண்டு, பாதிரியார் இவரை அப்பள்ளியில் ஆசிரியராக நியமித்தார். பின்பு அவருக்குத் தமிழ்ப் பண்டிதராகவும் இருந்து, விவிலிய நூலைத் தமிழில் மொழிபெயர்க்கப் பெருந் துணை புரிந்தார். இதனல், அந்நூல் முழுவதையும், அதன் பூர்வாசாரியர் உரைகளையும் நுணுகிப் படிக்கும் வாய்ப்பு, இவருக்குக் கிடைத்தது.

பின்பு இவர் தாமாகவே சித்தாந்த நூல்களையும் நன்கு கற்றுணர்ந்தார். வடமொழியையும் விரைவில் கற்று வேத சிவாகமங்களையும் ஓதிப்பொருளுணர்ந்தார். இப்படித் தமது

இருபத்திரண்டாம் ஆண்டிற்குள் மும்மொழிகளிலும் பாண்டித்தியமுடையவராயும், சிறந்த சொல்வன்மை படைத்தவராயும் புகழுடன் விளங்கினுர். தம் சமய உண்மைகளை அறிய வாய்ப்பின்றிப் புறச்சமய மோகங்கொண்டோர் பலர் இவரால் திருந்தினர். பலர் பாதிரி மதத்திலிருந்து சைவத்திற்குத் திரும்பினர்.

தம் நாட்டில் சைவ சமயங் குன்றியதைக் கண்ட நம் நாவலர் பெருமான், ஆக்க வேலைகள் பல புரிந்து தம் சமயத்தைக் காக்கவேண்டுமென்று உறுதி கொண்டார். கி. பி. 1844ல் கருவி நூல்களையும் சமய நூல்களையும் ஊதியம் பெருது பிள்ளைகட்கு மாலையிலும் இ ர வி லு ம் கற்பிக்கத் தொடங்கினுர். இவரிடம் கற்றவர் பலர், இவரைப் போலவே தமிழறிவையும் சமய ஞானத்தையும் பல ஊர்களிற் பரப்பி வந்தனர். முப்பத்திரண்டு ஆண்டுக் காலம் - தாம் சிவபதம் அடைவதற்கு முன் மூன்று மாத காலம்வரையிலும் (1879)- நாவலர் பெருமானும் அறிவு மேகம், அருள் மழை பொழிந்து, தமிழகத்தில் வாடியிருந்த சைவப் பயிர் மீண்டும் செழித்தெழத் துணை செய்தது. இவருக்கு "நாவலர்" என்னும் பட்டம் திருவாவடுதுறை ஆதீன மகா சந்நிதானமவர்களால் அளிக்கப்பட்டது.

நாவலர் பெருமான் குணமாண்பும் சிறப்பாகப் போற்றத் தக்கதொன்ருகும். இவர் பொய், கொலை, களவு, காமம் முதலிய குற்றங்களைக் காய்ந்தவர் – ஒழுக்கத்தில் உயர்ந்த உத்தமர்; சீலத்திலும் சிவபக்தியிலும் சிறந்தவர். "வழிபாட்டுக்கு அங்கம் பாவங்களை வெறுத்தலும், புண்ணியங்களைச் செய்தலும். இவை இல்லாத வழிபாடு, அபத்தியத்தைத் தள்ளாமலும் பத்தியங் கொள்ளாமலும் தின்கின்ற மருந்துக்குச் சமானமாகும்" என்று இவர் தமையனுருக்கு 1860-ல் எழுதிய கடிதமொன்றில் எழுதியுள்ளதை மெய்யன்பர்கள் பெரிதும் பராட்டுவர். அவர்பால் கோபம் மட்டும் காண்பதுண்டு என்பர். ஆனுல் அக்கோபம் சிவ நிந்தை, சைவ சாத்திர நிந்தை, சிவாபராதம் இவற்றைச் செய்வார் மீதுதான் எழுவதாயிருந்தது. தவறு செய்வோரைத் திருத்தி நன்னெறியொழுகச் செய்வதே அவர் கோபத்தின் நோக்கமும் பயனும். "வேத நிந்தனை, சைவநிந்

தனே பொருமன"த்தையன்றே திரு நந்தி தேவர் சிவபெரு மானிடம் கேட்டுப் பெற்ற பதினுலு வரங்களுள் முதன்மையாய் நிற்பது! இக்கால இந்துக்கள் தாமச குணத்தைச் சத்துவகுண மெனத் தவருக நினைக்கின்றனர்" என்று சுவாமி விவேகானந் தர் கூறியதும் இங்கு நினைவு கூரற்குரியது.

நாவலரிடம் கோபத்தைவிடப் பன்மடங்கு பெருகியது இரக்கமே. அடைக்கலம் புகுந்தாரைக் காத்தலும் குற்றத்திற்கு வருந்தி மன்னிப்புக் கேட்பவர்க்கு அதை அளித்தலும் அவர் பால் விளங்கின.

மற்றேர் பெரும்பண்பு அவரது அஞ்சாமையும் ஆண்மை யும். இதற்கு ஊற்ருயிருந்தது அவரது தூய்மையும் சிவ நாட்ட மும். செல்வந்தர், பெரும் பதவியிலிருப்போர் என்ற காரணத் தால், தம்மைத் தாழ்த்திக் கொள்ள ஒரு நாளும் அவர் உடன்பட் டதில்லை. அவர் பெர்ஸிவல் பாதிரியாருக்குத் தமிழ் பண்டித ராகவும், அவரது ஆங்கிலப் பள்ளியில் ஆசிரியராயும் பணி செய்த காலத்திலும் தமது சைவக் கோலத்தை அவர் அகற்ற வில்லை.

நாவலர் பண்பின் சிகரமாக விளங்குவது அவர் தியாக வாழ்க்கை. அதைப் பற்றிச் சிறிது, முன்னமே குறிக்கப் பட்டது. செயற்கரிய தியாகம் இன்னென்று செய்ததையும் கருதவேண்டும். ஆங்கிலங்கற்ற அவர், தமது முன்னேர்களைப் போல் அரசாங்க அலுவலை மேற்கொண்டு செல்வமும் அதிகார மும் சிறக்க வாழ்ந்திருக்கலாம். ஆனுல், அவர் அவ்வாழ்க்கை யையும் சமயப்பாதுகாப்புப் பணிக்காகத் தியாகஞ் செய்து விட்டார். இம்மட்டோ! அவருக்குத் திருமணஞ் செய்வித்துப் பல்லாயிரம் ருபாய் பரிசாகக் கொடுக்கச் சில உறவினர் முற் பட்டபோது, அவர் நைட்டிக பிரமச்சரிய வாழ்க்கையையே தமது ஆயுள் முழுவதும் கடைப்பிடிக்கத் தீர்மானித்திருப்ப தாகக் கட்டுரைத்து விட்டார். மூவாசையும் வென்ற இப்பெருந் தலைவரின் மாண்பை என்னென்று போற்ற வல்லோம்? பற்றற் ருன் பற்றினையே பற்றிக் கொண்டார். மற்றைப் பற்றுக்கள் யாவும் அணுகாது அகன்றுவிட்டன.

இனி, நாவலர் பெருமான் உலகநலங் கருதிச் செய்து முடித்த சிறந்த காரியங்களில் முக்கியமானவைகளைக் குறிக்கலாம். (1) வித்தியாசாலைகளை யாழ்ப்பாணத்திலும் சிதம்பரத்திலும் தாபித்தது. (2) வித்தியாநுபாலன அச்சியந்திரசாலையைச் சென்னையில் ஏற்படுத்தியது. (3) பழைய பல அரிய நூல்களைப் பிழையின்றி அச்சிட்டதும், தாமே பலநூல்கள் இயற்றி வெளியிட்டதும். (4) பதிபுண்ணிய பரிபாலன சபையைச் சென்னையில் நிறுவி நடத்தியது. (5) நல்லூரிற் கந்தசாமி கோயில் திருப்பணி செய்தது. (6) 1872ல் திருக்கேதீச்சரத் திருப்பணி முயற்சி தொடங்கியது. (7) கீரிமலையில் சிவாலயம் புதுப்பித்தது. (8) சிதம்பரம் சிவகாமியம்மனுக்கு உரியதாய 40 வேலி நிலத்தைத் தன்னதாக்கிக் கொண்டு அநுபவித்து வந்த ஒரு செல்வனிடமிருந்து மீட்டு அம்மையாருக்கே உரிமையாக்கியது. (9) ஸ்ரீ மூலட்டானேசுரர்க்குப் பாற்காவடி தருமம் நியமித்ததுமாம்.

நாவலர் சரித்திர ஆசிரியர் த. கைலாசம் பிள்ளையவர்கள் எழுதியுள்ளபடி, அப்பெருந்தகை யாருடைய "செய்கைகள் எல்லாம் பிறருடைய நன்மை குறித்தனவேயாக", அவர் "கற்ற கல்வியும் செய்த பூசையுமாகிய இரண்டுமே சுயநலங் கருதியனவாம்"[1].

சிதம்பரத்தில் ஒரு பெரிய சைவ வித்தியாசாலையையும் மடத்தையும் தாபிக்க எண்ணி, கி. பி. 1860ல், பத்துப்பக்கங் கொண்ட ஒரு விஞ்ஞாபனம்[2] எழுதி வெளியிட்டார். வேறுசில தலங்களிலும் இவைபோன்ற வித்தியாசாலைகளைத் தாபிக்க விரும்பி கி. பி. 1868லும் 1870லும் இரண்டு விஞ்ஞாபனங்களை வெளியிட்டார். இவை யாவும் சைவப்பற்றுள்ள நன்மக்கள் இன்றும் ஊன்றிக் கவனிக்கத்தக்கவை. இவற்றுள் ஒன்றில் "தேவாலயந்" தோறும் சனங்களுக்குச் சைவ சமயத்தைத் தேசமொழிகளிலே போதித்தல் வேண்டும் என்று காமிகாகமத்திலே சிவபெருமானால் விதிக்கப்பட்டிருக்கிறது" என்று அவர் அறிவுறுத்தி யிருப்பதை அன்பர்கள் போற்றுவர்.

---

[1] *நாவலர் சரித்திரம் பக். 98.* [2] P *பக். 43–52.*

நாவலரவர்களே விரும்பியதுபோல், மக்கள் பிடியரிசியும் சமயக்காணிக்கையும் தவருது தந்து வருவார்களேயானுல் அவ்வுபகாரஞ் செய்வதோடு, வாரவழிபாட்டையும் தங்கள் தங்கள் ஊர்த் திருக்கோயில்களிலும் திறம்படநடத்திப் பிரார்த் தித்து வருவார்களேயானுல், இந்துசமுதாயம் ஒற்றுமையுடைய தாய்ப் புத்துயிர் பெற்றெழும்: அறம்பல வளரும்; ஆண்டவன் அறக்கருணை பெருகும்.

நாவலர் பெருமான் உரைநடை தனிச்சிறப்புடையது – திருத்தமும், இனிமையும், எளிமையும், உடையது. அவர் எழுதிய மூன்று பாலபாடங்களும், இரண்டு சைவவினு விடை களும், பெரியபுராண வசனமும், சூசனமும் பெரிதும் போற்றப் படும் பயனுள்ளநூல்கள். பல நூற்களுக்கு உரைகளும் இயற்றினுர்.

சைவத்தைப் பழித்துப் பேசியும் எழுதியும் வந்த அந்நிய மதப்பாதிரிகட்குத் திறமான பதில் தரும் நாவலர் நூல் சைவ தூஷண பரிகாரம் என்பது. இதன்கண் பல பிரமாணங்களை விவிலிய நூற்களிலிருந்தே எடுத்துக்காட்டி நிந்தகர்களை வாயடக்கியுள்ளார். இவருடைய நண்பர்கள் சிலரும் பாதிரி களின் தாக்குதல்கட்குப் பதிலாக நூல்கள் எழுதினர்; பல பிரசங்கங்களிலும் கண்டித்தனர். நாவலர் எம்பெருமான், பர சமய கோளரியாக அவதரித்துத் திருநெறியாம் சைவ சமயத் தைக் காத்திரா விட்டால், யாழ்ப்பாண முழுதும் கிறித்துவ நாடாய்ப் போயிருக்கும்.

இவ்வாறெல்லாம் நாவலர் முப்பத்திரண்டு ஆண்டுக் காலம் சமயத் தொண்டாற்றித் தமது ஐம்பத்தேழாம் வயதில் கி. பி. 1879ல் சிவபெருமான் திருவடியில் கலந்தார்கள். அபார கல்வி, சீரிய ஒழுக்கம், அழுத்தமான பக்தி, நாவன்மை, எழுத்துத் திறன், அயரா உழைப்பு முதலிய சிறந்த பண்புகளுடன் தியாக வாழ்க்கை நடத்திச் சைவங் காத்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரைச் சைவ உலகம், இறைவனுல் அனுப்பப் பெற்ற ஒரு மகாத்துமா என்றே, என்றென்றும் போற்றிவரும்.

நாவலரின் குறிக்கோளும், வாழ்க்கையும், தொண்டும் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் இந்துக்கட்கு— சிறப்பாகச் சைவ சமயிகட்கு-அறிவார்ந்த தொண்டுகளைத் திறமையாகச் செய்வதற்கு ஆர்வம் தரத்தக்கவையே. விஞ்ஞானத்தின் விபரீத வளர்ச்சியால் மக்களினம் இனியும் தொடர்ந்து உயிருடன் வாழ்ந்து வருமா? அல்லது ஆன்மிக அறிவு, தெய்வ உணர்வு, அன்பு, அருள் என்னும் பண்புகளை இழந்து அணு ஆயுதங்களை—நச்சு வாயுக்குண்டுகளை—மக்கள் திரள் மேல் வீசி மாய்த்து விடுமா? என்று பல தேயங்களும் ஐயுற்று நடுங்கிக் கொண்டிருக்கின்றன. தெய்வ நம்பிக்கையுடையோர் இறைவனை நோக்கித் தாம் "திகைத்தால் தேற்ற வேண்டாவோ" என்று கதறுவர். எமக்கு "ஆர் துணை நீயலதே" என்று அலறுவர். நாம் ஏதும் அறியோமே! நம் முன் வந்து, "நல்லனவும் தீயன வும் காட்டித்தான் வருகின்றான் இறைவன். ஆனால் ஆணவ மலத்தினால் அறிவு பெரிதும் மறைக்கப்பட்ட ஆன்மாக்கள் பலர் அவன் திருக்குறிப்பை அறியமாட்டாதவர்களாயுள்ளனர். ஓரளவு செம்மை பெற்ற உளமுடையோர், "ஒத்துச் சென்று" அவனது "திருவருள் கூடிடும் உபாயமது" அறிந்து உய்வர்; உயர் நிலை யடையவர்.

உலக சமயங்கள் சில தலைமுறைகளில் தமது வரம்பையும் நோக்கத்தையும் மறந்து தம்முட் போர் செய்து, உலக நயத் தைக் கெடுத்து வந்துள்ளன. ஒரு பெரும் இறைவனே பல உயிர்களையும் "தாயாகித் தந்தையுமாய்த்" தாங்குகின்றான். சமயங்களெல்லாம் ஒரு பேரூரைப் பல திசைகளிலிருந்தும் வந்த டையும் வழிகள் போன்றவை. எவற்றையும் பழித்தலும் அடைத் தலும் அடாச் செயல்.

பல நாட்டவர்களும் ஒருவர் தேயத்துக்கு மற்றவர்கள் எளிதில் வந்து அங்குள்ளாரிடம் கலந்து பேசி அன்பைப் பெருக் கிக் கொள்ளச் சில ஆண்டுகளாக வசதி மிகுந்துள்ளது. கருத் துக்களை விரைவில் பரிமாறிக் கொள்ளவும், பலவகை வசதிகள் பெருகி வருகின்றன. உலகமெல்லாம் ஒரு பெருங்குடும்பமாய் ஒத்து வாழ முடியும். இந்த ஒற்றுமை உணர்ச்சியை எல்லாச் சமயங்களும் பெருக்க வேண்டும். ஒவ்வொரு சமயமும் பிற

சமயங்களிலுள்ள நன்மைகளை ஆவலுடன் ஆராய்ந்தறிந்து ஒற்றுமை நயங்கண்டு மகிழ வேண்டும். வேற்றுமையில் ஒற்றுமை உள்ளதைக் கண்டு களிக்க வேண்டும். இது அறிவுடைமைக்கோர் அடையாளமாகும். எல்லாச் சமயங்களையும் நீதியிருல் ஓரிடத்தே காணப் பல நூற்ருண்டுகட்கு முன்னரே நம் முன்ேனோர்கள் முயன்றுள்ளனர். முடிந்த பேருண்மையோ சமயாதீதமானது; வாக்கு மனங்கடந்தது. சமயங்கள் அந்நிலையை அடைதற்குரிய சாதனங்களே. சைவம் இத்தகைய சமரச நன்னிலையை உடையது, சைவர், பிற சமயங்களின் உண்மைகளை உணர்வதோடு பிறர்க்கும் தமது மரபின் வந்த அனுபூதிமான்கள் சரிதங்களையும், திரு வாக்குக்களையும், மத மாற்றம் செய்ய வேண்டும் என்னும் நோக்கமின்றி அவரவர் மொழிகள் வாயிலாகத் தெரிவித்தல் உலக நல வளர்ச்சிக்கு ஒத்ததோர் கடமையாகும். அது செய்யுமுன் நம்சமயத்தில் பிறந்தவர்கட்கே நம் சமய அறிவு இந்நாளில் நன்ருகக் கிடைக்கவில்லை. இக்குறையை முதலில் நீக்க அறிவார்ந்த முயற்சிகளைச் செய்தல் வேண்டும். இக் கடமையைப் பேரறிவுடனும் ஆற்றலுடனும் செய்து வந்த சான்ருேர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர். அவர் செய்த பெரு நன்றியை என்றும் மறவாது போற்றி நன்னெறியில் நடப்போமாக.

---

# நீதிநெறி விளக்கம்

## உரைநடையும் ஆங்கில மொழிபெயர்ப்பும்*

பாலகவி, வயிநாகரம்
**திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,**
தேவகோட்டை.

[மலர் 13. இதழ் 12-ன் தொடர்ச்சி]

ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணி னனிதாழ்ப—தூக்கின்
மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலேக்கு.

அறிவின் அமைதியினுல் பெரியவர்களாகிய சான்ரேர்கள் அறிவில்லாதவர்களது மேற்போன நடையைக் காண்பார்களாயின் மிகவும் தாழ்ந்து நிற்பார்கள். ஆராய்ந்து பார்த்தால் துலாக்கோலில் இடப்பட்ட மெல்லிய பொருள்கள் மேன்மேலும் மேலே எழுந்து செல்ல வலிய பொருள்கள் கீழே தாழ்ந்து செல்லுமல்லவா?

### The humility of the great

Men of real dignity and wisdom will conduct themselves with utmost humility when they see the presumptuous behaviour of their inferiors. Does not the pan having lighter weights go up higher and higher in weighing, while the other having heavier ones sink down the scale? 17

---

Translated by: Sri P. Mutharasu M. A., B. T., Lecturer in Tamil, Sri. K. G. S. Arts College, Arulnandi Nagar, Srivaikuntam.

விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யு
நலத்தகையார் நல்வினையுந் தீதே—புலப்பகையை
வென்றன நல்லொழுக்கி னின்றேம் பிறவென்று
தம்பாடு தம்மிற் கொளின்.

புலன்களாகிய பகையை வென்று விட்டோம். நல்லொழுக்கத்தில் நிற்கின்றோம். என்னும் இவை முதலாகிய பிறவற்றையும் நினைத்துத் தமது பெருமையைத் தாமே பாராட்டிக் கொண்டால் அறநூல்களில் செய்யத் தகாதனவென்று விலக்கியவற்றை விடுத்து விதித்தவற்றையே செய்யும் நலம் மிக்கவர்களுடைய நன்மையும் தீமையாகவே கொள்ளப் பெறும்.

### The evil of boasting

Even the good acts of the virtuous who avoid what is forbidden and practise what is enjoined, will turn evil, if they proudly boast themselves of their own merits saying, "We have overcome the hostile senses and have stood steadfast in the path of virtue." 18

தன்னை வியப்பிப்பான் றற்புகழ்த நீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றூற்—றன்னை.
வியாவாமை யன்றே வியப்பாவ தின்ப
நயவாமை யன்றே நலம்.

தன்னுடைய புகழைப்பிறர் பாராட்டும்படி செய்கின்றவனது தற்புகழ்ச்சி, தீச்சுடரை நல்ல தண்ணீரைச் சொரிந்து வளர்ப்பதனோடு ஒப்பது. யாரும் தற்புகழ்ச்சி இல்லாமலிருந்தாலன்றோ அது இவ்வுலகத்தில் வியப்பாய் இருப்பது? இன்பத்தை எதிர் பாராமல் இருப்பதன்றோ நலம் என்று கருதப் பெறுவது?

### The fault of self-admiration

The self - praising of a man with a view to gain the admiration of the world is like trying to kindle the flame by pouring cold water. Is it not really admirable for one to abstain from self - commendation? Is it not true happiness when one gets himself freed from all desires. 19

பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டு
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்.

உலகத்தாரால் மதிக்கப் பெறும் பெருமதிப்பை வேண்டுபவன் எவ்விடத்திலும் எக்காலத்திலும் மறவாமல் நோற்க வேண்டிய நோன்பு ஒன்று உண்டு. அது மற்றவர்களது சிறப்புக்குரிய செயல்களை யெல்லாம் பலர் அறியும்படி சொல்லி அவர்களது சிறுமைச் செயல்களைத் தாம் அறிந்திருந்தாலும் வெளியில் விடாது அடக்கி எல்லோரிடத்திலும் தாழ்மையைப் புலப்படுத்தும் சொற்களைச் சொல்லுவதாகும்.

### The surest way to win esteem

He who seeks to gain the high regard of others should always observe and never forget to keep up to the vow of publishing the excellences of others, concealing their short-comings and addressing all with humility. 20

கற்றுப் பிறர்க்குரைத்துத் தாநில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை—சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல்.

நூல்களைக் கற்று அதன்படி நடக்க வேண்டும் என்று பிறருக்குச் சொல்லித் தாம் அந்த நெறியிலே நில்லாதவர்களது வாயிலிருந்து வெளிப்படும் பயனற்ற சொற்களுக்கு ஒரு வலிமைத் தன்மை உண்டு. அது "இப்படி ஒழுகுங்கள்" என்று சொல்லிய நீர் அங்ஙனம் ஒழுகாததற்குக் காரணம் என்ன என்று நாணம் மிகும்படி ஒருவன் எதிர்ப்பட்டு இடித்துச் சொல்லுதற்கு இடங்கொடா வண்ணம் நன்காராய்ந்து சொல்லுதலாகும்.

### Practice better than preaching

The empty words of those who have learnt well with ability to teach others, but do not stand up to

their teaching have force only in one respect, which consists in their guarded speech, after deep reflection so as to prevent another from asking them face to face to their shame, the following question, "Why don't you practise what you preach?" 21

பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார்
தமக்குப் பயன்வே றுடையார்—திறப்படூஉந்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை வேலை கொளல்.

கல்வி, தமக்கும் பிறருக்கும் பயன்படுவதை எண்ணாமல் தாம் கற்றவற்றைப் பிறருக்கே பயன்படும்படி விற்பவர்கள் வலிமை மிக்க தீவினைகளுக்கு அஞ்சாத வீரத்தைக் கொண்டு தென்புலத்தார் தலைவனாகிய கூற்றுவனைப் பல வகையான தண்டனைகளைப் பல முறை செய்யும்படி வேலை கொள்ளுதலாகிய பயனைத் தமக்கென உடையவர்கள் ஆவார்கள்.

### The vice of selling learning

Those who disregard the fact that learning is advantageous to both themselves and others but sell their learning only to benefit others, defying the terrors of evil deeds, render an obligation to themselves automatically by adding to the duties of the God of Death who is to award proper and adequate punishment on death, to evildoers. 22

(To be Continued)

உ

திருச்செந்திலாண்டவன் துணை

சைவ சமயப் புரவலரும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அருளாட்சி அரசரும் ஆகிய காசிவாசி ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் **சுவாமிகள்** அவர்களுக்கும் ஸ்ரீ காசிமடம் இளவரசு வித்துவான் **ஸ்ரீ முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள்** அவர்கட்கும்,

**சென்னை பிரம்பை, குமரகுருபரர் மன்றத்தினர் சமர்ப்பிக்கும்**

# பாராட்டுரை

மங்கல மகிமை மாநகர் செந்தில்
கந்தர் அருளால் கலியெலா நீங்கக்
கந்தர் கலிப்பா கவினுற அருளிய
குமர குருபரர் குலவுறு மடத்து
அருளர சாகி ஆட்சி புரியும்
அருள்வடி வான அருணந்தி அடிகளார்
ஆற்றும் அருட்பணி அளவில அம்மா!
மறநெறி மாற மணிகண்டர் வாய்மை
அறநெறி விளங்க அருள்திரு முறைகள்
சாத்திர தோத்திர சமய இலக்கியம்
எம்போல் வாரும் எளிதினிற் கற்க
அழகுற வெளியிடும் அருமைஎன் னென்போம்!
அறிவுநூற் பணிகளும் ஆலயப் பணிகளும்
அன்னம் பாலிக்கும் அடியவர் பணிகளும்
எண்ணிச் சொல்ல எவரால் இயலும்?
பாவையாள் மானம் பாதுகாத் திடவே
பரன்முடி வணக்கிய பனசைமா நகரே
பனிவரை இமயப் பரமன் இருக்கையாய்

இருளெலாம் நந்த எழுந்தநற் குரவர்
அருள்நந்தி அடிகளே அபரச் சிவமாய்
முருகக் குழவியே முத்துக் குமார
சுவாமி இளவரசு என்னத் தோன்றியே
தொண்டுமிக் குயர்ந்த தொண்டைநன் னுட்டில்
சிவநெறிச் செல்வர்கள் சிறப்புறு சென்னை
பிரியா நேயர்வாழ் பிரம்பை அதனில்
அன்பால் சிறியேம் அமைத்திடப் பெற்றுக்
காசி மடத்துக் கனிதரு நிழலில்
வளம்பெற வளரும் குமர குருபரர்
மன்றத் தினுக்கு வருடந் தோறும்
வெளியிடும் நூல்களும், மேதகு சிறப்பின்
"குமர குருபரன்" குயின்றநல் நாமத்
திங்கள் இதழும், சிறப்பின பிறவும்
அயரா துதவி ஆசிதந் தருளும்
மாரி யன்ன வான்பெருங் கருணைக்கு
இயற்று கைம்மாறு ஏதும் உண்டோ?
வாடுறு மேநனி மாணடி மைப்பயிர்
நீடுறு நின்னருள் நின்றுபெய் யாவிடின்!
ஆதலின் உரிமையால் அன்பர்கள் யாவரும்
கயிலைமா மணியைக் கவினுற இறைஞ்சும்
அருள்நந்தி அடிகள் அடிமலர் வாழ்க!
புலவரைக் காக்கும் புரவல! வாழ்க!
திருமுறை வளர்க்கும் செம்மலே! வாழ்க!
இளவர சான ஏந்தலே! வாழ்க!
காசி மடமும் கந்தன் அருளும்
குமர குருபரர் குன்று ஆசியும்
திருவரு ளோடு குருவருள் சிறக்க
வாழ்க வாழ்கென்று வணங்கிவாழ்த் துவமே!

# திருவுந்தியார்-விளக்கவுரை

பண்டித வித்துவான், சைவப்புலவர் சித்தாந்த நன்மணி,
திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

[மலர் 13, இதழ் 12-ன் தொடர்ச்சி]

வீட்டில் இருக்கில்என் நாட்டிலே போகில்என்
கூட்டில்வாள் சாத்திநின் றுந்தீபற
கூடப் படாததென் றுந்தீபற. 30

(வி – ரை) உயிராகிய கூட்டில் ஞானமாகிய வாளினைக் குருவருளால் நிலைநிறுத்தி, அதன் செயலே தன்செயலுக்குக் காரணம் என்பதை 'உணர்ந்து வாழ வேண்டும். இந்நிலை கைவரப் பெருது துறவறத்தில் நிற்பினும், இல்லறத்தில் நிற்பினும் யாதும் பயனில்லை என்பதாம். தன் செயலெல்லாம் இறைவன் செயலால் நிகழ்வது என்பதைத் தெரிந்து கொள்ளாமல் தக்கனுர் போலத் தன்செயலதாகவே கருதின் வீடு அடைய முடியாது என்பதாம்.

எல்லாவற்றையும் தன்ஞலே விடப்பட்டு நிற்றலின் வீடு என்பது துறவறமாயிற்று. இருந்தோம்பி இல்வாழ்தல் நாட்டிலே ஆதலின் அது இல்லறமாயிற்று. கூடு என்பது உயிராகிய கூட்டினைக் குறித்தது; வாள்-ஒளி. அது ஈண்டு ஞானத்தினையுணர்த்திற்று. 'ஞானவாள் ஏந்தும் ஐயர் நாதப்பறை யறைமின்!'- என்னும் திருவாக்கும் காண்க.

"வீட்டிலே சென்று வினையொழிந்து நின்ருலும்
நாட்டிலே நல்வினைகள் செய்தாலும் – கூட்டில்வாள்

சாத்தியே நின்றிலையேல் தக்கனூர் வேள்விசெய்த
மாத்திரமே யாம்கண்டாய் வந்து.”

என்னும் திருக்களிற்றுப் படியாரும் இக்கருத்தினை விளக்கி நிற்றல் காண்க.

சாவிபோம் மற்றச் சமயங்கள் புக்குநின்(று)
ஆவிய ருதேயென்(று) உந்தீபற
அவ்வுரை கேளாதே உந்தீபற. 31

(வி-ரை) பயனுடைய நெல்லைப் போல் காணப்பட்டு, முடிவில் பதராகத் தெரியும் சாவியனைய பிற பிறசமயங்களிற் சென்று, உயிர்க்குயிராகிய சிவபரம் பொருளை இழந்துவிடுதல் கூடாது. எனவே அவரவர் கூறும் கருத்துக்களையும் வினையில வென்று விடுத்தல் தக்கதாம்.

பயனில் சொல் பாராட்டுவானைப் ‘பதர்’ என்றாற் போலப் பயனில் கருத்துக்களைக் கூறும் சமயங்களையும் பதர் என்றார். சாவி-பதர். நெல்லில் பதரானவற்றைச் சாவி எனல் வழக்கினுள்ளும் காணப்படுவதாகும். ஆவி-உயிர்க்குயிராகிய சிவபரம் பொருள்.

நாவரசர் தாம் சமண சமயம் புக்குநின்ற காலத்தை நினைந்து நினைந்து வருந்துவதை அவர்தம் பாடல்களில் பல் வேறிடத்தும் காணலாம். அந்நாட்கள் எல்லாம் தாம் பிறவாத நாட்கள் என்றே கருதினர். அவ்வநுபவ வாக்கில் ஒன்று காண்க.

“பல்லுரைச் சமணரோடே பலபல காலம் எல்லாம்
சொல்லிய செலவு செய்தேன் சோர்வன்நான் நினைந்த போது
மல்லிகை மலரும் சோலைத் திருவையா(று) அமர்ந்த தேனை
எல்லியும் பகலும் எல்லாம் நினைந்தபோ தினிய வாறே.”

துரியம் கடந்தஇத் தொண்டர்க்குச் சாக்கிரம்
துரியமாய் நின்றதென்(று) உந்தீபற
துறந்தார் அவர்களென்(று) உந்தீபற. 32

(வி–ரை) தற்போதத்தைக் கடந்த ஞானியர்கள் இறை வனையே கண்டு தரிசித்திருப்பார்கள். அந்நிலை ஒரோவழி நீங்கி உலகியல் நினைவுவரினும் அவற்றையும் திருவருட் குண மாகவே நினைவர். இவர்களே மேலான ஞானிகளாவார் என்ப தாம்.

துரியம் இரண்டனுள் முன்னையது தன்னுணர்ச்சியையும் (தற்போதம்), பின்னையது இறையுணர்ச்சியையும் (பரபோதம்) குறிக்கும். சாக்கிரம்-நனவு. பேரருளாளர்களுக்கு இறை யுணர்ச்சியே மேலிட்டிருக்கும்; உலகியலுணர்வு ஒரோவழி வரி னும் அதன் கண்ணும் திருவருட் குணத்தையே காண்பர் என்பது இதன் கருத்தாகும். இவர்களின் பெருமையைச்

சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகில்
சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்கள் இவர்கள்
பாக்கியத்தைப் பகர்வதுஎன்! இம்மையிலே உயிரின்
பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றே
ஆக்குமுடி கவித்(து) அரசாண்(டு) அவர்கள் அரிவையரோ(டு)
அனுபவித்(து) அங்(கு) இருந்திடினும் அகப்பற்(று) அற்(று)
நோக்கியிது புரியாதோர் புறப்பற்(று) அற்றாலும் [இருப்பர்
நுழைவர்பிறப் பினில்வினைகள் நுங்கி டாவே.

என்னும் சித்தியார்ப் பாடலும் நன்கு விளக்கும். இத்தகைய சிவஞானியர்களைக் கொண்டே இறைவனும் சாப அருள்களை உயிர்களுக்கு நல்கி அவற்றை ஈடேறச் செய்வான் எனத் திருக் களிற்றுப் படியார் விளக்குகின்றது. அப்பாடல் வருமாறு:—

"துரியம் கடந்த சுடர்த்தோகை யுடன்என்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான் – துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யும் தன்மைகளும்
ஆக்குவிப்பன் அன்பர்க் கவன்."

பெற்ற சிற்றின்பமே பேரின்ப மாம்அங்கே
முற்ற வரும்பரிசு உந்தீபற
முளையாது மாயை என்(று) உந்தீபற. 33

(வி–ரை) மேல் கூறப்பட்ட ஞானியர்களுக்கு ஏன்றவினை யால் (பிராரத்தம்) நிலையற்ற இன்பங்களை அநுபவிக்க நேரி னும், அவர்களது எண்ணமும் கருவிகளும் இறையுணர்ச்சியி லேயே இருப்பதால் அவ்வின்பங்களும் பேரின்பங்களேயாகும். இங்ஙனம் ஏன்றவினை உடலோடு ஏகவே, இனி ஏறும் வினையும் (ஆகாமியம்) திருவருள் மேலிட்டால் வாராமல் போகும். பிறந்த உடம்பால் முகந்து நின்றன போக எஞ்சிய வினையும் (சஞ்சிதம்) குருவருளால் முன்னமே நீங்க இங்ஙனம் மும்மைதரும் வினை களும் ஞானியர்களுக்கு மூளாவாயிற்று. எனவே அவர்களுக்கு இனிவரும் பிறவியும் இல்லை என்பதாம்.

"ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும்இறை ஞானம்
கூடுமவர் கூடரிய வீடும் கூடிக்
குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே யிருப்பர்."

என்னும் சித்தியார்ப் பாடலும்,

"தென்னுவ லூர்மன்னன் தேவர்பிரான் திருவருளால்
மின்னும் கொடிமருங்குல் பரவையெனும் மெல்லியள்தன்
பொன்றும் முலையங்கல் புணர்குவடே சார்வாகப்
பன்னும் பயில்யோகம் பரம்பரையின் விரும்பினர்"

என்னும் திருத்தொண்டர் புராணமும் இக்கருத்தினை வலி யுறுத்தி நிற்றல் அறியலாம்.

"உடம்புடைய யோகிகள் தாம்உற்ற சிற்றின்பம்
அடங்கத்தம் பேரின்பத்து ஆக்கில் – தொடங்கி
முளைப்பதும் ஒன்றில்லை முடிவதும் ஒன்றில்லை
இளைப்பதும் ஒன்றில்லை யிவர்"

என்னும் திருக்களிற்றுப்படியாரும் இத்திருவுந்தியார்க் கருத் தினை விளக்கி நிற்றல் காண்க.

---

(தொடரும்)

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# பல்லூழி வாழியவே!

★

டாக்டர், திரு. பொ. திருஞானசம்பந்தம் அவர்கள்,
கள்ளகுளத்தூர்.

தங்கத்தமிழ் நாட்டினிலே
தவம்செய்து பெற்றுலும்
மங்காநல் அருணந்தி
மாட்சியுற்ற அடியார்போல்
எங்குமே பார்த்தறியோம்
இயம்பிடுவோம் இனிதேதான்
மங்களமாய் அவர்வாழ்வு
மாநிலத்தில் சிறக்க என. 1

அடிகளார் தோற்றுவித்தார்!
அருந்தமிழ்த் திங்களேடே!
குடியுமே சிறந்துவாழ
உறுதுணை செய்துவாழும்
படித்திடத் தூண்டும்நம்மைப்,
பண்பிதழ் குருபரனே!
திடமுடனே எந்நாளும்
தேன்போலே இனித்திடுவாய்! 2

பதினன்காம் யாண்டினிலே
பார்புகழக் குருபரனே
மதிநலத்தை மென்மேலும்
மக்கட்கு ஊட்டியேதான்
மதம் சைவம், மொழிதமிழும்
முன்னேற உழைத்தேதான்
விதவிதமாய் அழகுற்றே
வாழியவே பல்லூழி! 3

# செந்தூரன் திருவருளில்......

திரு. ஆதிரை பழநிசாமி அவர்கள் எம். ஏ.,
ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் கல்லூரி, ஸ்ரீவைகுண்டம்.

---

பாடிவரும் கடல்அலைகள் கரையில் மோதும்
பறவையினம் பயிலுமிசை இனிமை சேர்க்கும்
ஓடிவரும் பேரலைகள் செந்தூர் தன்னில்
ஒளிமுத்தப் பரிசுகளை வழங்கிச் செல்லும்
தேடிமிக இளைத்திட்டோம் முருகா உன்தன்
திருமுகத்தைக் காட்டுகநீ சற்றே என்று
நாடிவரும் அன்பர்குழாம் நவிலும் பாடல்
நற்றமிழே மணந்திடுமக் கடலோ ரத்தில். 1

வெள்ளைமணற் குன்றோரம் வளரும் சோலை
வண்டூதும் பூமரத்தில் வளைந்த செவ்வாய்க்
கிள்ளையினம் பேசுகின்ற பேச்சில், இன்பக்
குயிற்பேடு பாடுகின்ற பாட்டில், அன்புக்
கொள்ளையழ குடையவளாய்க் குமரன் நெஞ்சில்
குடிபுகுந்த கோலமயில் குறவர் செல்வம்
வள்ளிமகள் குரல்கேட்கும் வான நாட்டுத்
தேவரெலாம் வழிபடவே வருவா ரங்கு. 2

நீலநெடு வான்கிழக்கில் நெடுந்தூ ரத்தில்
நெடுங்கடலின் அமைதியெழும் விளிம்போ ரத்தில்,
கோலநெடு நீர்க்கடலும் வானும் ஒன்றாய்க்
கூடிஎழிற் குலவையிடும் அடிவா னத்தில்
காலைஎழும் இளங்கதிரோன் காட்டும் இன்பக்
கதிர்வேலன் மாமுகத்தில் கருணை பொங்கும்
சீலமிகும் அவன்வடிவில் சிந்தை தோயும்
செந்தூரன் திருவருளில் உலகம் வாழும். 3

---

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கல்வி நிலையங்களின் "புரவலர் தின" விழாவில்



தலைமை வகித்த திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் இளவரசு ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கு குமரகுருபர சுவாமிகள் கல்விச்சபைத் தலைவர் வரவேற்பிதழ் வாசித்தல்



ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி நிர்வாகக் குழுச் செயலாளர் வரவேற்பிதழ் வாசித்தல்



திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடம் ஸ்ரீலஸ்ரீ இளவரசு சுவாமிகள் அவர்களுக்கு குமரகுருபர சுவாமிகள் துவக்கப்பள்ளி கரஸ்பாண்டெண்டு வரவேற்பிதழ் வாசித்தல்



ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆர்ட்ஸ் காலேஜ் பிரின்சிபால் கல்லூரி ஆண்டறிக்கை வாசித்தல்

# சிலப்பதிகாரத்தில் ஓர் ஓரங்க நாடகம்

பேராசிரியர்
திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள்
எம்.ஏ. பி.எல்., எம்.ஓ.எல்.
தமிழ், மொழிஇயல்துறைத் தலைவர், அண்ணுமலைப் பல்கலைக்கழகம்.

## முதற்காட்சி

சிலப்பதிகாரத்தில் வரும் கொலைக்களக்காதையை ஓரங்க நாடகமாக ஆராயலாம். சிறந்ததொரு துன்பியல் நாடகமாக அது அமைந்திருக்கக் காண்போம். இதில் முதற்காட்சி மாதரி என்னும் ஆய்ச்சியின் வீட்டில் நிகழ்கிறது. இரண்டாம் காட்சி மதுரையின் பெருந்தெருவில் கோவலன் பொற்கொல்லனைக் காண்பதாக நிகழ்கிறது. மூன்ருங் காட்சி அரண்மனைக்குள்ளே அரசன் அரசியின் இடத்தை நோக்கிச் செல்லும்போது அவனைக் கொல்லன் காண்பதாக நிகழ்கிறது. நான்காவது காட்சி மதுரைப் பெருந்தெருவில் கொல்லன் கோவலனைத் தன் வீட்டிற்கு அருகே வைத்துச் சென்ற இடத்தில் நிகழ்கின்றது. எனவே இவ்வாறு நான்கு காட்சிகள் கொண்ட ஓரங்க நாடகமாகக் கொலைக்களக்காதையை இந்நாளைய கண்கொண்டு ஆராயலாம்.

இங்கே பழைய கிரேக்க நாடகங்கள் நம் நினைவுக்கு வருகின்றன. முதலிலிருந்து கதையை முழுவதும் கூருமல் கதையின் முடிந்த முடிவே முடிந்த பகுதியாக நாடகம் அமைந்து, கதையின் இடையே குதித்துத் தொடங்கலாம். சிலப்பதிகாரம் முழுவதையும் நோக்கினுல் இது உண்மை ஆகாது. முதலிலிருந்தே கதையை முற்றமுடியக் கூறிக்கொண்டு போவதோடு அல்லாமல், கண்ணகி தெய்வமாகக் கொண்டாடப் பெறுகின்ற நிலையும் வஞ்சிக் காண்டத்தில் விரிவாக வருகிறது. ஆனுல் கொலைக்களக்காதையை மட்டும் இவ்வாறு ஓரங்க நாடகமாகக் காணும்போது சில இலக்கிய நயங்கள் வெளியாகின்றன.

இவ்வாறு ஒவ்வொரு காதையையும் இந்தக் கண்கொண்டு ஆராயக்கூடும். அப்போது காப்பியமே இத்தகைய பல ஓரங்க நாடகங்களின் தொடர்ச்சியாக அமைந்து ஒரு தனிக் கோலம் கொள்ளக் காண்போம். ஒவ்வொரு காதையும் தனக்குத்தானே சிறப்புற்று நிற்கின்ற அழகினையே இங்கு வற்புறுத்த விரும்புகிறோம். இந்த நிலையில் ஒரு காதை மற்றொரு காதையோடு தொடர்பு கொள்வது ஒரு சிறப்பு வகையாம்; பிற காப்பியங்களில் வரும் நேர்வகையான தொடர்பு அன்று இது. இல்லையானால் எடுத்துக் காட்டாக அரங்கேற்றுக் காதையில் வரும் 175 அடிகளில் 163 அடிகள் வரை அரங்கேற்றத்தையே விரித்துக் கூறிக் கதைக்குத் தொடர்பாக 12 வரிகளே கூறும் முறைமையை விளக்க முடியாது.

இந்தத் துன்பியல் நாடகத்தின் முதற்காட்சியில், காட்சி அமையும் இடம் விளக்கப் பெறுகிறது. கண்ணகியைக் கவுந்தி அடிகளிடமிருந்து அடைக்கலம் பெற்ற மகிழ்ச்சி மாதரியின் முகத்தில் தவழ்கிறது. இந்த முதற்காட்சியில் கவுந்தி அடிகள் இவளைக் கண்ட பொருத்தம் "இடைக்குல மடந்தை அடைக்கலம் பெறுதல்" என்ற எதுகை நயமாகப் பொருந்திவரக் காண்கிறோம். இந்தக் கருத்து உள்ளத்தே நிலைத்து நின்று விடுவதால் வேறுவகையான எதுகை அமைப்புக்களையும் இது தூண்டுகிறது. 'இடைக்குலம், மடைக்கலம்' என வருவனவற்றைக் காண்க.

தனியே ஒரு காவல் சிற்றிலைப் புதியதாக ஒப்பனை செய்து கோவலனையும் கண்ணகியையும் ஆய்ச்சியர் அமர்த்தியுள்ளார்கள். கவுந்தி அடிகள் நெஞ்சம் விரும்பியது போலவே கண்ணகியை நீராட்டுகின்றார்கள்; கண்ணகியின் இயற்கை அழகு மதுரையின் செல்வப் பெண்கள் செய்து கொள்ளும் செயற்கைக் கோலத்திலும் சிறந்து விளங்குகிறது என்கிறாள் மாதரி. அவள் இங்கே கூறுவது பின்னே நிகழப் போகும் மதுரையின் அழிவை மனத்திற் கொண்டு நோக்கும்போது அதனையே குறிப்பது போன்றதோர் கீழறைப் பொருள் (Irony) அவள் கூற்றைப் படிக்கின்ற நம் மனத்தினுள் எழுகின்றது.

"கூடன் மகளிர் கோலங் கொள்ளும்
ஆடகப் பைம்பூண் அருவிலை அழிப்பச்
செய்யாக் கோலமொடு வந்தீர்க்கு"

என்கிறாள்.

மாதரி கண்ணகியை நங்கை என்று கூறி அவளைத் தன்னுடைய மகள் ஐயையின் நாத்தூண் ஆக்கு கின்றாள் (கணவனொடு உடன்பிறந்தவள்). இவ்வாறு கூறுவ திலிருந்து கோவலனைத் தன் மகனாகவும், கண்ணகியைத் தன் மருமகளாகவும் கொள்கின்ற மனப்பான்மை விளங்குகிறது. இது, அயலார் வந்தால் தமிழ்ப்பெண்கள் இன்றும் கொண்டாடி வரும் உறவு முறையாம். எனினும் இது வாய்ப்பேச்சின் அழகில் நில்லாது கவுந்தி அடிகள் கூறிய அடைக்கலம் என்ற சொல்லின் வழியே மாதரியின் உள்ளத்து உறுதியாக மாறி விட்டது எனலாம். கோவலன் இறந்தது கேட்டுப் பின்னே மாதரி உயிர் விடுகிறாள். கண்ணகியை நங்கை என்பதற்கு ஏற்பத் தன்னுடைய மகளைக் கண்ணகிக்கு அடித்தொழிலாட்டி ஆக்குகின்றாள். தன்னுடைய மகிழ்ச்சியையும் கவுந்தி அடி களின் அறிவினையும் பாராட்டி 'ஏதமில்லா இடந்தலைப் படுத் தினள்' என்று கூறுகின்றாள். 'மகன்' என்ற சொல்லுக்கு 'கணவன்' என்பது அக்காலத்துப் பொருள். ஆண்மக்களைப் பற்றிப் பெண் மக்கள் பேசும்போது தம்முடைய உறவினைவிட எதிர்நின்று பேசுவாரின் உறவாகக் கூறுவது தமிழ்நாட்டின் வழக்கம். அதனால் ஐயையும் கண்ணகியிடம் 'நோதகவு உண்டோ நும் மகனார்க்கு இனி' என்கிறாள். இங்கும் இதற்கும் எதிர்மறையாகக் கீழறைப் பொருள் (Irony) நம் உள்ளத்தே தோன்றுகிறது.

இவள் பேச்சு நாடகத்தில் பல இடங்களிலும் அமைவது போல ஒரு பகுதி கண்ணகியையும், அதன்பின் வரும் பகுதி இடைக்குலப் பெண்களை நோக்கியதாகவும் அமையக் காண் கிறோம். 'நாத்தூண் நங்கை' என்பது மாதரியின் மகள் ஐயையை குறிப்பதாகக் கொண்டோம். இவ்வாறே அரும்பத உரைகாரர் 'நாத்தூணாகிய ஐயையோடு நங்கை அமைத்தற்குப் புதுக்கலங்கள் கொடுங்கள்' என்றும் பொருள் ஆகலாம்.

இதுவே அடியார்க்கு நல்லார் காணும் பொருளும் ஆம். தான் வெளியே அரண்மனையில் நெய்யைச் செலுத்தப் போவதால் இவ்வாறு தானே கலம்முதலியன தாராமல் பிறருக்குப் கட்டளை இடுகின்றாள்.

கடைசி விருந்து அமைவதைக் காண்கிறோம். சமணராகி இல்லறத்தில் வாழ்வோரின் உணவு முறைக்கு ஏற்ப, தகுந்த ஏற்பாடுகள் நிகழ்கின்றன. பலாக்காய், வெள்ளரிக்காய், கொம்மட்டி மாதுளை, மாம்பழம், வாழைப்பழம், சாலி அரிசி, பால் இவற்றைக் கொண்டே உணவினை அமைக்கின்றாள் கண்ணகி. எளிய சூழலாக இருந்தாலும் இனிய சிறந்த நிலை தான் இங்கே சுட்டப்படுகின்றது. எளிய வாழ்வின் உயர்வை இங்கே காணுதல் வேண்டும்.

செல்வத்திற் சிறந்து அடித்தொழிலாட்டிவரையே நம்பி வாழ்ந்தவர்கள் அன்பின் பெருக்கினாலே அகமுடையானுக்குச் சமைக்கவரும்போது கைசிவந்து, கண்சிவந்து நிற்பதைச் சங்கப் பாடல்கள் குறிக்கும். அக்காட்சியே இங்கும் காண் கிறோம். இடைக்குலத்திற்கு ஏற்ப வைக்கோலை எரிக்கின்றாள் ஐயை. அந்தச் சூழ்நிலைக்கு ஏற்பவே கைத்திறம் அமைந்த பனந்தடுக்கே மணையாக அமைகிறது. கண்ணகி கோவல னுக்குச் சோறு படைக்கும் காட்சியையும் புலவர் இங்கே விரித்துரைக்கின்றார்.

அவள் தரையின்மீது நீர் தெளித்தபோது புலவர் ஏதோ சடங்குபோல நிகழ்வதைக் கூறுமிடத்தும் நம் உள்ளத்தில் ஒரு விறுவிறுப்பை விளைவிக்கின்றார். 'மண்ணக மடந்தையைமயக்கு ஒழிப்பனள் போலத் தண்ணீர் தெளித்துத் தன்கையால் தடவி' என்கிறார். எதிர்காலத்தில் உலகம் அனைத்திற்கும் வரப் போகும் தீங்கினை உணர்ந்திருக்கும் அளவுக்குத் தம்முடைய கதை உலகத்தை விளக்கும் உண்மையாகக் கொண்ட புலவர் மனம் இந்தத் தற்குறிப்பேற்றத்தைக் காண்கிறது. கண்ணகி யின் செயல் இருண்ட உலகில் ஒளி தோன்றுவதுபோல அமை கிறது. பின் எழும் தீமையோடு இந்தக் காட்சியை ஒப்பிட்டுக் கண்டு, காப்பியச்சுவையைத் துய்க்க வேண்டும் என்ற கருத்

திருலே இங்குப் புலவர் சுட்டுகிருர். இந்த அன்பின் ஒற்றுமை யோடு, அன்பின் சிதைவான கொலேயை ஒத்திட்டுப் பார்க்கும் போது வீழ்ச்சிநிலே நன்ருக விளங்க அவலச் சுவை பொங்கி வழிகிறது.

இந்த அன்புக் காட்சியைக் கள்ளங் கபடம் அற்ற இடைக் குலமடந்தையர் பார்க்கின்றனர். கண்கொள்ளாக்காட்சி என் கின்றனர். ஐயையும் அவளுக்குத் தமக்கை முறையானவர் களும் நாத்தூண் மங்கையராகவே அமைந்து கண்ணகியையும், கோவலனேயும் காண்கிருர்கள். ஆயர்கள் அறிந்த கண்ணன் நினேவே அவர்களுக்கு வருகின்றது. கண்ணன் துயர் எல்லாம் தீர்த்த பின்னேயின் நினேவும் வருகிறது. கண்ணகியையும் கோவலனேயும் காணும்போது 'விழுமம் தீர்த்த விளக்குக்கொல்' என்றுபேசும் போது, தங்கள் வீட்டிற்குக் கோவலன் வரும் போது கொண்ட துயரக்கோலம் கண்ணகியின் அன்பு வழி பாட்டால் இன்பக்கோலமாக மாறியது என்ற உண்மையையும் உணர்கின்ருேம்.

இந்த முதற்காட்சியின் மூன்ருவது பகுதிதான் இதன் உயிர்நிலே எனலாம். தனியாகக் கோவலனும் கண்ணகியும் உளம் திறந்து பேசிக்கொள்கின்றனர்.

இப்போதுதான் இருவரும் தனியே இருந்து பேசுவதற்கு இடம் கிடைக்கிறது. தங்கள் உள்ளத்தில் அடைபட்டுக் கிடந்த எண்ணங்களேயும் உணர்ச்சிகளேயும் வெளியிடும் வாய்ப்பு இங்கே எழுகிறது. கண்ணகி கோவலனுக்கு வெற்றிலேச் சுருளேத் தந்து கொண்டிருக்கிருள். கோவலன் அவளே அருகு அணேத்துக்கொள்கிருன்.

"கண்ணகியின் மெல்லடி காட்டில்" எவ்வாறு நடந்து செல்லும் என்பதை எண்ணி என்னுடைய பெற்ருேர் எவ்வளவு வருத்தப்பட்டார்களோ?" என்கிருன். தன்னுடைய எண்ணத் தைத் தன் குலமக்களின் எண்ணமேயாக எண்ணுகின்ற பாங்கினே இங்கேகாண்கிருேம். முதுகுரவரையும் அவன் மனம் மறக்கவில்லே. கோசிகமாணியிடம் கோவலன் தன் முதுகுர வர்க்கு அனுப்பிய கடிதத்தையும் அறிவோம்,

இப்போது அமைதியாக இருந்து அவன் தன்னுடைய வாழ்வைத் திரும்பிப்பார்க்கும் போது அவனாலேயே அவன் வாழ்வை நம்பமுடியவில்லை. 'கனவா; நனவா' என்கிருன். வல்வினை என்பது முடிவாக அவன் உள்ளத்தில் தோன்றுகிறது. தன்உள்ளம் கலங்கியே தன் வாழ்வில் அவன் நடந்து வந்து விட்டதாகக் கூறுகிருன். ஏதோ ஒன்று அவன் அறிவை மறைத்தது. அதனால் இன்று அப்பழைய வாழ்வின் போக்கைக் காண்பது போல அன்று அவனால் காணமுடியவில்லை. இவ்வாறு காணாமைக்குத்தானே பொச்சாப்பு என்று பெயர்? "நெஞ்சு அறிந்த தீமை ஒன்றும் செய்யாமற்போனாலும் தீமை, தீமை தானே?" என்று கருதித் தனக்கு நன்னெறி உண்டோ என்று நெஞ்சு குமுறுகின்ருன்.

கண்ணகிக்கும் தீமை செய்ததை உணர்கின்ருன். அவளைச் 'சிறுமுதுக்குறைவி' என்று பாராட்டுகிருன். அவள் வாழ்வின் நுட்பத்தையே அவளது பேரறிவாகப் பாராட்டுகிருன். மேலும் அவளை மதுரைக்குக் கொண்டுவந்தது தீங்குக்கு மேல் தீங்கு என நினைக்கிருன். அவன் கண்ட கனவு–அதில் அவனுக்குள்ள நம்பிக்கை-இவை எல்லாம் அவன் உள்ளத்தை விரட்டுகின்றன. அதனாலேயே அந்த அவலக்கவலை எல்லாம் தோன்ற 'எழுகென எழுந்தாய் என்செய்தனை', என்று திகைக்கிருன்.

கோவலன் பேச்சில் அவனுடைய மனம் மாறி உள்ளதை அறிகிறோம். ஆனால் கதையோடு பொருத்திப் பார்த்தால்தான் இது தெரியும். கோவலன் மனமும், கண்ணகி மனமும் இன்னமும் ஒன்ருக இயைந்து விடவில்லை. எனவே தன் கவலை முழுவதும் கண்ணகியைப் பற்றியதே என்பதைக் கோவலன் உணர்ந்திருந்தாலும் அதனை எவ்வாறு கண்ணகியிடம் வெளியிடுவது? அவ்வாறு வெளியிடாதபோது 'எழுகென எழுந்தாய் என்செய்தனை' என்ற பேச்சைக் கண்ணகி தவருக உணர்கிருள். விடை வேண்டாத அவலக் குரலை ஒரு கேள்வியாகவே மயங்கி விடுகின்ருள். தன்னிடத்தில் ஏதோ கோவலன் தவறு காண்பது போல அக்கேள்வி தோன்றுகிறது. "நீ ஏன் மறுத்து இருக்கக் கூடாது?" என்பதே அவன் பேச்சின் குறிப்பு. ஆனால் கோவலன் கூற்றோ விடை வேண்டாத அவலக் குரல்,

அதனை உணராத கண்ணகி அதற்கு விடை கூறத் தொடங்குகிருள். "என்னுடைய வாழ்க்கையின் போக்கே அது. என்னுடைய நெஞ்சமும் வாழ்க்கையும் உம்மைப் பின்பற்றியே அன்றும் இன்றும் மாருது செல்கின்றன. நான் ஒருவருக்கும் தீங்கு செய்யவில்லே. ஆனுல் அவ்வாறு இருந்தும் என் வாழ்வில் பிறரை வருந்தவைப்பதாகவே என் வாழ்வு அமைந்துவிட்டது; அதற்கே நான் வருந்துகிறேன். உம்மைப் பிரிந்தேன் என்ற வருத்தம் என் தன்னலத்தால் எழுந்தது அன்று. இல்லறம் நல்லறம் ஆவது பிறருக்கு உதவுதலாலேயாம். அத்தகைய சிறப்பினை இழந்தேன்; இழந்தேன்; இதனைப் பேரிழப்பாகக் கருதியதனை உம்முடைய பெற்ருேரிடம் நான் எவ்வளவோ மறைத்தும் அறிந்து கொண்டார்கள்: கவலேயே வடிவான என்னைப் பாராட்டி இன்பம் மூட்ட எவ்வளவோ முயன்ருர்கள். நானும் உள்ளத்தின் துன்பத்தையும் உள்ளத்தின் மெலிவையும் மறைக்க முயன்றும் நான் மறைக்க முயல்வதையே கண்டு வருந்தினுர்கள். நான் உள்ளத்தின் உள்ளே இல்லாத ஒரு மகழ்ச்சியை வெளிக்குக் காட்டிக் கொண்டு புன்னகை பூத்து அவர்கள் எதிரில் நிற்கும்போது நான் இத்தனையும் முயல்வது எதற்கு என்று தெரிந்து கொண்டார்கள். என் துயரம் என்னுடைய கணவனுல் எழுந்ததன்று; நான் மகிழ்ச்சியுடனேயே இருக்கின்றேன் என்று அவர்கள் கண்ணில் படும்படி வெளிக்குக் காட்டி நின்றேன். அதனைக் கண்டும் உண்மையை உணர்ந்து மேலும் மிகமிக மனம் நைந்து நின்ருர்கள். இதைக் காணக்காண என்னுல் பொறுக்க முடியவில்லே. இதுவே நான் உம்மைப் பிரிந்து அனுபவித்த துன்பம். இவ்வாறு நடக்கும் என்று நீங்கள் எதிர்பார்த்துப் போற்றிக் காத்திருத்தல் வேண்டும். ஆனுல் பொச்சாப்பால் போற்ரு ஒழுக்கம் புரிந்தீர்" என்று இடித்துக் கூறுகின்ருள். பொச்சாப்புத்தான் அவனுடைய பெருங் குற்றம் என்பதனைத் தன்னையும் அறியாமல் கண்ணகி காட்டிவிடுகின்ருள். ஆனுல் "இந்தப் போராட்டத்தை நீங்கள் எப்படி அறிந்திருக்கக் கூடும்" என்பதுகூட இப்பேச்சில் தொனிக்கின்றது. "ஆனுல் என்னுடைய வாழ்வோ அன்றும் இன்றும் உங்கள் காரணமாக உமது பெற்ருேர்க்காக

வும், உமது இல்லறத்தின் காரணமாக உலகிற்காகவும் வாழ முந்தும் வாழ்வாகும். அந்த வாழ்க்கையைப் புறத்தில் வாழ முடியதாத போது உள்ளத்தின் வாழ்க்கையாகக் கொண்டு வாழ்ந்தேன், இதில் என்றும் நான் மாறியதில்லே. ஆதலின் நீங்கள் எழுகென எழுவதன்றி வேறு என்ன யான் செய்தல் கூடும்'' என்று விடை கூறுகிருள். தன் நெஞ்சில் இருந்த முள்ளே இவ்வாறு எடுத்து எறிகிருள்.

இதனுல் கண்ணகியின் சிறந்த குறிக்கோள் வாழ்க்கை-தன்னல மற்ற தியாக எண்ணம்-பிறர் மனமும் வாடாதபடி வாழ வேண்டிய நோக்கம்-இவற்ருல் அவள் பட்டபாடு-இவை எல்லாம் ஒரு சில அடிகளில் அமைந்த அவள் பேச்சிலிருந்து தெள்ளத்தெளிய விளங்குகின்றன. இவ்வளவு சுருக்கமாக ஒரு பாத்திரத்தின் மனப்பாங்கை, மனப்போராட்டத்தை, மனவளர்ச்சியைச் சித்திரிப்பது அருமை.

கோவலன் இதனே அறியாதவன்அல்ல இருமுதுகுரவர் ஏவலும் பிழைத்தேன் (அதனுல் சிறுமுதுக்குறைவிக்குச் சிறுமையும் செய்தேன்) என்று அவன் கூறியதாகப் பொருள் கொள்ளலாம் அன்றே? இந்தப் பொச்சாப்பினே அவனே ஒப்புக் கொள்வான். ஆனல் தன்னுடைய பேச்சினைக் கண்ணகி தவருக உணர்ந்ததை அறிகிருன். ஆனல் அதன் உண்மைப் பொருளே எவ்வாறு வெளிப்படையாக இப்போது அவன் கூறமுடியும். "என்னே இழக்கப் போகின்ருய். அகதியாய் அலேயப் போகின்ருய். அதுதான் என் கவலே'' என்று எவ்வாறு அவன் வாய்விட்டுக் கூற முடியும். ஆனல் அதுதான் அவன் உள்ளத்தில் ஓடுகிறது. "எல்லோரையும் விட்டு வந்தாய், வந்தபோதும் நான் உனக்குத் துணே இல்லே. உன்னுடைய குணங்களே உனக்குத் துணேயாக நின்றன. உண்மையில் நீயே எனக்குத் துணேயாக நிற்கின்ருய். உன்ளுேடு வந்தபோது என்னுடைய துயரத்தை நான் மறந்தேன்'' என்று அவளிடம் அவன் பேசுகிருன். அப்போது 'ஆதலின் உன்னே நான் அகதியாகவிட்டுப் போகிறேன் என்று எவ்வாறு நினேக்கக் கூடும்' என்று தன் மனத்திற்கே ஆறுதல் கூற முயல்கின்ருன் என்றே நாம் கொள்ளவேண்டும்.

அவளை உலகம் வழிபடப்போகும் தெய்வப் பெருவாழ்வை இவன் நினைக்கின்றான் எனலாம். இருந்தாலும் அவலத்தில் எழுந்த குரலே கேட்கிறோம். "பொன்னே கொடியே புனைபூங் கோதாய்! நாணின் பாவாய்! நீணில விளக்கே! கற்பின் கொழுந்தே! பொற்பின் செல்வி!" என்று கூறி அவன் வாழ்வு முழுவதிலும் அவளைத்தான் கண்ட காட்சியை மிகத் தெளிவாக விளக்கி விடுகிறான். அதனால் நம் கண்ணில் அழுகையே வருகிறது. மனையறம் படுத்தகாதையிலும் இத்தகைய பாராட்டுக்களைக் கோவலன் கூறுகிறான். அவை எல்லாம் உவகையில் எழுந்தவை. அவன் ஒரு பாவலன் என்பதனைச் சுட்டுபவை. அங்கு அவை கொள்ளும் பொருள் வேறு; இங்கு இவை கொள்ளும் பொருள் வேறு. அங்கே வெறுங் கற்பனை. ஆனால் இங்கோ வாழ்வின் உண்மையனுபவம்.

என்னதான் உள்ளத்துறுதி இருந்தாலும் மனித இயல்பு கலங்கத்தானே செய்யும். என்ன நிகழப்போகிறது என்பதனை இவன் உணர்கிறான் என்பது தெளிவு. ஆனால் அவள் அறியாளே; அவள் தெய்வமானாலும் உலகில் திகைக்கத்தானே செய்வாள்.? அவலக்கவலைக் கையாற்றைத் தாண்டுவதுஎப்படி? இப்படி எல்லாம் உள்ளத்தே எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணாகி நிற்கிறான் கோவலன். இருந்தாலும் அவள் அறியாதபடி மாற்றிப் பேசுகிறான். 'நின் சிலம்பு ஒன்று தா. நான் விற்று வருகிறேன்' என்று மாற்றிப் பேசும் போதும் துன்பம் வெளியாகிறது. "மயங்காது ஒழிக" என்று முடிக்கிறான். இங்கும் கண்ணகி அவன் பேச்சின் உள்ளாழத்தைக் காணமுடியாது. அவன் பேசிய பேச்சில் எழுந்த வருத்தத்தையே கருதி இவ்வாறு கூறுகிறான் என்று தானே அவள் எண்ணக் கூடும்.

அவனோ கடைசி அணைப்பு என்று கருதியே அவளை ஆர அணைத்துக் கொள்கிறான். எவ்வளவு தொலைவுமயங்கித் தழுவிக் கொண்டான் என்பதனைப் பின்னர் அறிவோம். அவன் தலைக்கண்ணி இவள் கூந்தலின்மேல் அவள் கொள்ளுமளவு தழுவி நின்றான் எனப் பின்னர் உணர்கின்றோம் (ஊர்சூழ்வரி 35). இவர்கள் அன்பின் வெளியீட்டினைக் காட்ட வேறிடம் இல்லையால், இங்கே நாம் காணக் காட்டுகின்றார் காப்பியப் புலவர்.

இந்த இன்பத்தின்பின் வரும் வீழ்ச்சி இதனுல் மேலும் பெருந் துன்ப வீழ்ச்சியாக நம் மனத்தில் பதிவதற்கு ஏதுவாகிறது. மெள்ளக் கோவலன் தனிப்படுகிருன். கண்ணகியையும் பிரிந்து உள்ளத்து உறவானுேர் ஒருவரும் இன்றித் தனிப்பதுதானே இங்கே காணும் வீழ்ச்சி. அதனை ஆய்ச்சியர் இல்லத்திலேயே காண்கிருேம். துன்ப இயல் நாடகம் உள்ளத்தளவில் முற்றி விட்டது எனலாம். யாரும் இல்லாத ஓரிடம் செல்கிருன். கண்ணகியும் கூடத் தன்னைக் காணுத நிலையில் அவனைக்கண்டு உள்ளம் வெதும்புகிருன்; கருணை மறவன் உள்ளம் கலங்கு கிருன். கதறியழத்தான் வேண்டும்; ஆனுல் அதனை அடக்கிக் கொள்கிருன். அதுதான் இங்குள்ள வீரம்! துன்பஇயல் நாடகத் தலைவர்கள் தம் முடிவினைத்தாமே அஞ்சாது நாடிப்போகும் நிலை முடிவில் தோன்றும். அதனுல் அவர்கள் பெருமை விளங்குவது போல இவன் பெருமையும் இங்கே விளங்குகிறது என்றே கூறவேண்டும்.

---

## கந்தனைக் காணேனடி

ராகம். திலங்கு. தாளம் சதுச்ரம் எடுப்பு $\frac{1}{2}$

எடுப்பு கந்தனைக் காணேனடி எந்தன்
கானமயில் கூடவரும் என் காதலையே நாடிவரும் (கந்தனை

தொடுப்பு நந்தவனத்தில் முன்னுள் நானிருந்தேன் தனியாய்
சுந்தர முகம்காட்டி சுகம் தந்து மறைந்த அந்த (கந்தனை

முடிப்பு அந்தமிகும் அரக்கர் அகந்தை அழிக்கவந்தோன்
விந்தை பலபுரியும் சிந்தையுடன் சிறந்தோன்
உந்தனுக்கும் எந்தனுக்கும் உலகிற்கும் ஒருவனவன்
கந்தன் கடம்பன் குமரகுருபரன் என்னும் (கந்தனை

*சங்கீத சாஹித்ய வித்வான், இசை அமைப்பாளர்*
சிதம்பரம் டி. நடராஜ தீக்ஷிதர்
*102, கீழரத வீதி, சிதம்பரம்,*

# THE DOCTRINE OF CREATION IN SAIVA SIDDHANTA

**Mr. P. Mutharasu,** M. A., B. T.

St. Kumaraguruparar, the great Tamil Sage and the founder of Sri Kasi Mutt, has described Saiva Siddhanta as the honey - like and ambrosia-like juice being the essence taken from the ever sweet and rare fruit, borne at the top of the Tree of Vedanta.* Sir John Marshall has declared after elaborate research that Saivism is the most ancient living faith in the world. According to Rev. W. Gowdie, it represents the high water mark of Indian thought and Indian life. The great Tamil Scholar and missionary Dr. G. U. Pope says, "The Saiva Siddhanta System is the most elaborate, influential and undoubtedly the most intrinsically valuable of all the religions of India. It is peculiarly the South Indian and Tamil Religion". This system of philosophy is one of the classical products of the Tamil mind.

The Tamils are noted for their cosmopolitan outlook in almost all fields of knowledge and enterprise. In the religious field also the Tamil saints have evolved, as the quintessence of their spiritual and worldly experience, an all-embracing philosophy, the greatness of which lies in its wide and liberal outlook. It admits

---

* ஒரும் வேதாந்தமென் றுச்சியில் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவ சித்தாந்தத்
தேனமுது.

within its fold the truths embedded in all other religions and at the same time it possesses merits, peculiarly its own and unknown to other religions. Hence it is said that Saiva Siddhanta may be ranked among the perfect and cleverest system of human thought.

One of its such merits is that Saiva Siddhanta is the only system of philosophy which has bravely faced and boldly answered the knotty question of creation which has bewildered practically all the other religions and other systems of philosophy. The other systems either give us unsatisfactory explanations or coolly bypass the crux of the problem. The answer given by the Siddhantin is logical, rational and agreeable to one and all.

Before going into the details of the doctrine of creation in Saiva Siddhanta, it is essential to have a glimpse of the fundamental features of the system and its authoritative books. Saiva Siddhanta postulates the eternal and distinct existence of three entities called Pathi, Pasu and Pasam or God, Soul and Matter. Pathi is Supreme, All-powerful and Perfect. Pasam is inert and insentient. Pasam denotes Anavam, Karmam and Maya. Pasu denotes souls which are innumerable in number. They are inextricably shrouded by the Pasam. All the three are eternal. These are not in any way peculiar to this system alone, as they are recognized all the world over in some form or other as Brahman, Jiva and Jada or as God, Mind and Body or under some other names. But the other schools differ only in the explanation given to each and the relationship among them either in bondage or in liberation.

According to Saiva Siddhanta, God is Omniscient Omnipotent, Self-effulgent and stands pervading all. He has no likes or dislikes with purposes to be fulfilled. Hence the world can be of no conceivable use to Him. On the other hand, the world or Matter being inert, it can obviously derive no benefit from God for itself. So, by the process of elimination, we have got the soul which is neither God nor Matter. The strange situation of the soul is that it alone can know God or Matter at a time. Its peculiarity lies in that it identifies with the thing to which it is allied. Moreover, it is in need of the material body, organs, world and objects of enjoyment to get rid of the eternally binding disease Anava Mala which completely shrouds the cognitive, conative and affective functions of the soul. In order to liberate the souls from this bondage, God the Merciful has created this universe and helps the souls to work out their Karma, overcome the clutches of Anava and enjoy His Bliss. In this system, there are three categories not only to start with, but also in the state of release, with of course this difference. "They remain not as the Lord, the Bound and the Binding, but simply as the Supreme Being, the Self and the Dirt." As Saiva Siddhanta is an **Advaita-system**, Advaita meaning **non-dualism** (i. e., the denial of the duality of God and soul and not the denial of the existence of the two), there is the metaphysical necessity of a minimum of three categories.

It has already been said that Siddhanta philosophy is the choicest, classical product of the Tamil mind. Spiritual activities and religious movements extending over several centuries in the cultural life of the Tamils have marked the system in the making. The ques-

tions of God, Self and Matter have kept the Tamil mind thinking from very ancient times and instances for the same are seen in Tholkappiam, the earliest extant Tamil Grammar and social treatise and other early Sangam literature. The religious movements during the rule of the Pallavas and Cholas tended to the crystallisation of the ideas and formulation of a clear and regular philosophy of religion. Hence, for source books in Tamil, we have the heart-melting and soul-stirring devotional utterances of the four great Tamil saints and others collected and canonised as Pannirutthirumurai and the fourteen Meikanda Sastras in which the systematic and doctrinal exposition of the philosophy is given. Of these, Meikanda Devar's Sivagnana Bodham is the most important and basic text, the best and the most lucid exposition of which is the Sivagnana Siddhiar of Arulnandi Sivachariyar. In Sanskrit, the Vedas and Agamas are generally accepted as authoritative Scriptures.

Now, let us analyse the doctrine of creation as expounded in Saiva Siddhanta. The first sutra* of Sivagnana Bodham and the first chapter of Sivagnana Siddhiar deal with the questions of creation of the Universe and the author of creation. "Since the universe consists of things of various forms denoted by 'He, She and It' all of whom are subject to the three operations of destruction, reproduction and preservation, it is easily conceivable that there must be something different from it which caused it and into

---

*அவன்அவள் அதுவெனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர். — சிவஞானபோதம்

which all these have been involved. That is the Destroyer (Hara). He causes the evolution of the universe in order to free the souls from their bondage (மலம்). He is eternally free, Intelligent and Sat." While recruiting belief for the assertion of the existence of God, the efficient cause of the universe, the existence of Maya and Souls also are simultaneously proved in the first sutra of Sivagnana Bodham, mentioned above. This Energising Power causing the three changes for the benefit of the souls is called God. To establish this, Meikandar never resorts to Scriptural support but bases his arguments on tangible grounds of perception and reasoning, expressed or implied, because no support is necessary at all when the statement is a matter of one's own experience. The process of reasoning proceeds from the known to the unknown.

To start with, a clear understanding of the nature and phenomena of the visible Universe is essential. This universe is constituted of living or intelligent beings and lifeless or physical objects. The universe of the living beings or souls is not visible unless they display themselves through the various physical frames ordained. Though the analysis can be related only to the physical universe it can also be taken to include the spiritual universe seen with their material bodies. We know that the physical universe is made up of subtle parts, making it liable for decomposition and recomposition. In short, it is composite. In addition it is spottable as He, She and It. It has a definite form perceptible to the senses. From observation, we find, it is subject to the three states of emergence, stay and absorption. A thing which is not really existing, cannot undergo these three

changes. Again, an unreal or fictious object like a hare's horn has no existence at any time, past, present or future. As such it cannot undergo the three changes viz. destruction, reproduction and preservation. Hence, the Universe which is perceptible to the senses to be a synthesis of real things at all times and by all people, is real at all times. This is known as the principle of Satkarya by the Siddhantin. Scientists, after so many experiments, have stated that matter is indestructible and in other words "the law of conservation of matter." Moreover, there is definite orderliness in the processes occurring in the Universe and they do occur again and again. As the Universe is real at all times, it does not cease to exist when destroyed, but assumes the form of its cause. When it is reproduced it takes the form of effect and when preserved it sustains the form. These are called Involution, Evolution and Sustenance.

To be concluded in the next issue

# முருகன் திரு அவதாரம்

தருமபுர ஆதீன வித்துவான்,
"திருவண்ணாமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
**வயிநாகரம், திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,**
தேவகோட்டை.

பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் மெய்யன்பர்களாகிய நல்லடியார்கள் பொருட்டாகப் பல்லாயிரக் கணக்கான உருவத் திருமேனிகளைக் கொண்டு எழுந்தருளிவந்து அருள்புரிந்த செய்திகளைப் புராணங்களின் வாயிலாக நாம் அறிகின்றோம். சிவபுராணங்கள் எல்லாவற்றுள்ளும் சிறந்தனவாகத் திருத்தொண்டர் புராணம், திருவிளையாடற் புராணம், கந்தபுராணம் ஆகிய மூன்றினையும் ஆன்றோர் உயர்த்திக் கூறுவர். இவற்றுள் கந்தபுராணம் முருகப்பெருமானது உற்பத்தி முதலிய நிகழ்ச்சிகளைக்கூற முற்பட்டு அவற்றோடு தொடர்புடைய வேறு பல வரலாறுகளையும் சைவ சித்தாந்த தத்துவ உண்மைகளையும் தெளிவுபெற எடுத்துரைக்கும் சிறப்பை உடையது. வடமொழிப் பதினெண் புராணங்களில் ஒன்றாகிய ஸ்காந்தத்தின் ஒரு பகுதியே, தமிழில் "கந்த புராணம்" என்னும் பெயரில் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகளால் 10345 செய்யுட்களில் அமைத்துத் தரப்பெற்றுள்ளது.

காஞ்சிப் பதியிலுள்ள குமரகோட்டத்தில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானது பேரருளை முழுவதும் பெற்றவர் கச்சியப்ப சிவாசாரியர். கந்தபுராண அரங்கேற்றம் நிகழ்ந்த காலத்தில் ஆசிரியரது பெருமையை நிலைநிறுத்துதற்காகக் குமரகோட்டத்துப் பெருமானே புலவர் வடிவங் கொண்டு அவைக்களத்திற்கு வந்து "வீரசோழியம்" என்னும் இலக்கண நூற் சுவடி அதுகாறும் மறைந்திருந்ததை வெளிப்படுத்தித் தந்தருளினனென்று வரலாறு கூறுகின்றது.

கந்தபுராணம் உற்பத்தி காண்டம், அசுர காண்டம், மகேந்திரகாண்டம், யுத்தகாண்டம், தேவகாண்டம், தக்ஷ காண்டம் என்னும் ஆறு பிரிவுகளையுடையது. கந்தபுராணத்தி லுள்ள ஆறு காண்டங்களின் பொருள்களும் 1048 செய்யுட் களில் அமையும்படி வைத்து நமது ஆதி குமரகுருபர சுவாமி களின் மாணவராகிய வெள்ளியம்பலவாணத் தம்பிரானின் மாண வரும் தருமை ஆதீனத்து முனிபுங்கவருமாகிய ஸ்ரீ சம்பந்த சரணாலய சுவாமிகள் "கந்த புராணச் சுருக்கம்" என்ற பெயரில் ஒரு அரிய நூலைத் தந்திருக்கிறார்கள். ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய கந்தர்கலிவெண்பா, கந்தபுராணச் சுருக் கத்தைவிட அளவாற் சிறியதாகிக் கந்த புராணத்துப் பொருள னைத்தையும் தன்னுட் கொண்டு விளங்குகின்றது.

கந்த புராணத்திலுள்ள உற்பத்திக் காண்டத்தில் முருகப் பெருமான் திருவவதார நிகழ்ச்சி இடம்பெற்றுள்ளது. மாலயன் தனக்கும் ஏனை வானவர் தனக்கும் எட்டா மூலகாரணமாய் நிற் கும் மூர்த்தியாகிய சிவபெருமான் தம்மை வேண்டித் தவம் புரிபவர் அனைவருக்கும் வேண்டியவற்றை வேண்டியவாறே கொடுத்து உதவுவார். சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் ஆகிய மூவரும் சிவபெருமானை நோக்கி நீண்ட காலந்தவங் கிடந்து பலவரங்களைப் பெற்றனர்.

"தேவர் யாவருஞ் சென்று தொழப்படு
மூவ ராகி யொழிந்திடு நுங்களைத்
தாவி லாதநஞ் சத்தியோன் றேயலால்
யாவர் வெல்பவ ரென்று விளம்பிமேல்".

என்பது கந்தபுராண வரம்பெறு படலத்தில் ஒரு திருப்பாடல். "சிவசத்தி ஒன்றே யன்றிவேறு யாரும் உங்களை வெல்வா ரல்லர்" என்று சூரனாதியோர் தவத்திற்கு மகிழ்ந்து சிவபெரு மான் வரங்கொடுத்து விட்டார்.

பெறுவதற்கரிய பேறுகள் பலவற்றை வரத்தாற் பெற்ற அவ்வசுரர்கள் ஆணவந் தலைக்கேற அடாதவற்றை யெல்லாம் செய்யத் தொடங்கினர். அவர்களது ஆட்சியில் அபலைகளான அமரர்கள் பட்ட அல்லலுக்கு அளவேயில்லை. அரியயன் முதலிய

அனைவரும் துன்பம் பொறுக்க மாட்டாது சிவபெருமானிடம் முறையிட்டார்கள். தவறு செய்யும் சூரனுதியோரை அழித் தொடுக்கித் தஞ்சம் புகுந்த தேவர்களுக்கு வாழ்வு வழங்க வேண்டிய பொறுப்பு சிவபெருமானுக்கு வந்தது. அதனைச் செய்வதற்கே தம்மோடு பிரிப்பின்றி இருக்கின்ற சத்தியின் வடிவமான முருகப் பெருமானுகச் சிவபெருமான் திருவவதாரம் செய்தருளினுர். இதனைக் கந்தபுராணம் திருவிளையாட்டுப் படலத்தில் சிவபெருமான் உமையம்மையாருக்குச் சொல்லுவ தாக அமைந்துள்ள

> " ஆதலி னமதுசத்தி யறுமுக னவனும் யாமும்
> பேதக மன்ருல் நம்போற் பிரிவிலன் யாண்டும் நின்ருன்
> ஏதமில் குழவி போல்வான் யாவையு முணர்ந்தான் சீரும்
> போதமு மழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான் "

என்ற திருப்பாடலால் அறியலாம். சூரன் அமைச்சியற் படலத் தில் சிங்கமுகன் சூரபன்மனிடம் சொல்லுவதாக அமைந்துள்ள

> " எத்தி றத்தரும் நுங்களை வெல்கில ரெமது
> சத்தி வென்றிடு மென்றனன் கண்ணுதற் றலைவன்
> அத்தி றத்தினு லல்லவோ வறுமுகக் குமரன்
> உய்த்த செய்யவே லுண்டது தாரக னுயிரை "

என்ற திருப்பாடலில் சிங்கமுகன் சூரனுக்குக் கூறும் அற வுரையும் இங்கே சிந்திக்கத் தக்கதாகும். சூரபன்மனுதியோர் உண்டி உறக்கம் ஆகியவற்றை ஒழித்து, உடம்பை ஒறுத்துச் செய்த அருந்தவத்தின் பயனுகப் பெறுதற்கரிய பேறுகளைப் பெற்றனர். எனினும் அறியாமைக்கு மூலமாயுள்ள ஆணவத் தின் சேட்டை அவர்களை விட்டபாடில்லை. அதனுல் பெற்றவற்றி னும் மேலான பெரும் பேற்றைப் பெற முடியாதவர்களாகி முன்பு கிடைத்த பேற்றையும் இழக்க வேண்டியவர்களாக அவர்கள் ஆயினுர்கள். சிவபெருமான் வரம் கொடுப்பதில் எவ்வளவும் எளியவராயிருந்து விரும்பியவற்றை எல்லாம் குறை யில்லாமல் வழங்குவார். அவ்வரங்களைப் பெற்றவர்கள் நெறி முறையிலிருந்து வழுவுவார்களாயின், அவர்களை அறக்குறை வாராத நிலையில் ஒறுப்பதிலும் அவர் பின்வாங்காதவர்

என்பதையே, முருகப்பெருமானது திருவவதார நிகழ்ச்சிநமக்கு அறிவிக்கின்றது.

இறைவனது இருவகைப்பட்ட மறமும் அறமும் ஆகிய கருணைகள், உயிர்களை உய்தியின் பாற்படுத்தும் ஒப்பற்ற சிறப்பை உடையன. முருகப்பெருமான் தானவர் குலத்தை வேரறுத்து, வானவர் குலத்தை வாழவைத்த நிகழ்ச்சியில்; மடிந்த தானவர்கள் மீண்டும் பிறப்பிறப்பிற்பட்டு வருந்தாது நற்கதி பெற்றனரென்பதனாலும், சூரபன்மன் மயிலும் சேவலு மாகி முருகனடியார்களால் இன்றும் வணங்கப் பெறுகின்ரு னென்பதனாலும் இவ்வுண்மையை நாம் அறியலாம்.

நலம் பெருகுக.

உ
Siva Siva

# Thevara Endowment at the Sri Vinayaka and Subramanya Mandirs, New Delhi

## Landed Property Worth Rs. 80,000/-

This endowment is founded by His Holiness Silasri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal, Head of Sri Kasimutt, Tirupanandal (Madras State) to provide for a Thevaram Hymnist (Oduwar) at the Sri Vinayaka Mandir, Vinay Nagar and Sri Subramaniaswami Mandir (of Sree Swaminatha Swami Seva Samaj, Regd.) on the Hillock near Modhi Bagh, New Delhi for singing of Thevarams of the Three Great Saiva Tamil Saints viz. Sri Tirugnanasambandar, Tirunavukkarasar and Sundaramoorthi Swamigal, who graced the Bharath with their soul-stirring devotional songs in praise of Siva, who sang hymns from Kailas, Kedar nath etc. on the Himalayas to Kanyakumari in the South and who travelled throughout the land and toiled for the uplift of humanity exhibiting miracles such as :—

i. bringing out a bride full of life and vigour from dead bones collected in a pot;

ii. using as a float a stone boulder to which Sri Appar was tied and thrown into the sea;

iii. bringing back to life a boy devoured by a crocodile and similar others.

The citizens of the Bharath from time immemorial were united in the spiritual and cultural field and contributed their share for the National Integration of the Bharath. To strengthen the oneness of the Bharath in the spiritual field, to propagate Tamil

Music and culture in Northern India, to inculcate Bhakthi in the capital city and to encourage devotion for the Thevara Thirumurais, this endowment has been made. This endowmeut shall be styled as "Thevara Endowment at the Sri Vinayaka and Subramanya Mandirs, New Delhi."

2. The property endowed for the above said purpose is detailed in the schedule hereto attached and consists of Acres 54-55 of Wet and dry lands in Suryamoolai village, Suryamoolai vattam of Kumbakonam Taluk, Thanjavur District (Madras State) with patta standing in the name of the Donor and enjoyed by him. The management of the property and the administration of the endowment shall vest in the Donor and his successors in interest.

3. The net annual income from the property i. e. excluding the charges thereon, dues to Government, village establishment charges, village samuthayam, maramath expenses, endowment working expenses etc. shall be utilised for the purpose stated in the succeeding paragraph.

4. (a) A Thevara Hymnist (Oduwar) shall be appointed by the Donor to sing Thevaram in proper "Pans" (பண்) (Tamil Music) on alternate days in the Sri Vinayaka Mandir and Sri Subramanya Swami Mandir at New Delhi at least one hour in the evening.

(b) The Thevara Hymnist shall be paid a monthly salary of Rs. 200 (Rs. Two hundred per month.) He shall be eligible for 3 days leave per month, if satisfactory medical evidence is produced.

(c) If the Thevaram Hymnist puts in a continuous satisfactory service for 11 months in a year, he shall be eligible for privilege leave of one month or 30

days with full salary for his visit to his native place in South India for bonafide cause. He will also be paid a sum of Rs. 200 for his to and fro expenses, which shall be disbursed to him after he rejoins duty. Sanctioning of this leave shall vest with the Donor and his successors in interest.

(d) On receipt of a certificate, in the prescribed form, signed by the Presidents or Secretaries of the Committees managing the said Mandirs, the salary will be sent to the Thevara Hymnist direct for the number of days, he actually sang in the Mandirs.

(e) The Donor and his successors-in-interest shall have power to appoint, transfer, suspend or dismiss the Thevara Hymnist at their discretion. If the Thevara Hymnist is transferred to any other place under other endowments instituted by the Donor he shall be paid such salary as could be paid under that endowment.

5. The balance of income shall be accumulated to a sum equal to a year's salary and afterwards any balance of income shall be utilised at the discretion of the Donor for propagation of Thevaram Music and like charities and purposes.

6. The said income shall not be diverted to any other purpose than the one stated above.

7. The estimated annual income from the property is Rs. 4000 and the value of the property is Rs. 80,000.

Tirupanandal<br>Dated 22-12-1962. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

---

Registered at Tiruvadamarudhur Sub-Registrar's office on 22-12-1962 as No. 2773 of Book 1 volume 1167. pages 414 to 417.

1138-ம்ளு, புரட்டாசி, ஐப்பசி, மாதங்களில்

## கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 9631 to 37 | சிவஞான சித்தியார் சுபக்கம் (உரையுடன்) | தருமபுர ஆதீனம் |
| 9638 to 45 | கொற்றவன்குடி உமாபதிதேவ நாயனுர் அருளிச் செய்த சித்தாந்த நூல்கள் (உரையுடன்) | ஷெ |
| 9646 to 52 | திருக்கச்சியேகம்பத் திருப்பதிகங்கள் | ஷெ |
| 9653 to 62 | சித்தாந்த நூல் திரட்டு | ஷெ |
| 9663 | La Legende Des Jenor Deciva A Madurai. | Par R. Dessigane; P. Z. Pattabiraman lt. Filliozat. |
| 9665 | டாக்டர் உ. வே சாமிநாதய்யர் நூல் நிலையச் சுவடிகளின் விளக்கம் (சமயம், தத்துவம் சைவம்) vol III, | டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நூல் நிலையம், அடையாறு, மதராஸ்–20. |
| 9666 | பன்னிரு திருமுறை வரலாறு (முதல்பகுதி) முதல் ஏழு திருமுறைகள். | வித்வான் க. வெள்ளைவாரணன், விரிவுரையாளர், தமிழ் ஆராய்ச்சித்துறை, அண்ணுமலைப்பல்கலைக் [கழகம். |
| 9667 & 68 | தமிழ்க் காப்பியம் சூளாமணி. | கழக வெளியீடு. |
| 9669 | சங்க இலக்கியம் எட்டுத் தொகை ஐங்குறு நூறு (உரையுடன்) | கழக வெளியீடு. |

(தொடரும்)

## திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'

| | | | ரூ. ந. பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) (புதிய பதிப்பு) | ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ,, | ... | 2 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) ,, | ... | 1 30 |
| 7* | திருவாசகம் ,, | ... | 0 56 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) | ... | 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | ... | 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை ,, (அச்சில்) | | |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) (அச்சில்) | | |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு | ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 00 |
| 17 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 75 |
| 18 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, | ... | 2 75 |
| 19 | ,, யுத்த தேவகாண்டம் ,, | ... | 2 00 |
| 20 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 50 |
| 21 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 22 | கந்தரனுபூதி | ... | 0 13 |
| 23 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 37 |
| 24 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 06 |
| 25 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... | 0 37 |
| 26 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 50 |
| 27 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 06 |
| 28 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 29 | திருக்குறள் – பொருட்பால் ,, | ... | 2 50 |
| 30 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | ... | 1 00 |
| | ஷை 28. 29. 30 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 00 |
| 31 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 32 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.

Regd No. M. 5574 குமரகுருபரன்.

| எண் | நூல் | | விலை |
|---|---|---|---|
| 33 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 34 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 35 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை - மதுரை மீனாட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 36 | திருவாரூர் நான்மணிமாலை - முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 25 |
| 37 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை - தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 38 | பண்டார மும்மணிக் கோவை - காசிக் கலம்பகம் - சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 39 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 40 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... | 0 50 |
| 41 | பெரியபுராணம் - உரைநடை | ... | 2 00 |
| 42 | திருவிளையாடற் புராணம் - உரைநடை | ... | 2 25 |
| 43 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 44 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 45 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 46 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 47 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 48 | டை டை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... | 2 75 |
| 49 | டை டை காமத்துப்பால் டை | ... | 1 20 |
| 50 | அபிராமி அந்தாதி - தெளிவுரையுடன் | ... | 0 50 |
| 51 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... | 0 50 |
| 52 | கந்தரனுபூதி-தெளிவுரையுடன் | ... | 0 35 |
| 53 | திருவாரூர்-திருப்பதுவல்கள் | ... | 0 10 |
| 54 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... | 0 10 |
| 55 | பழமொழித்திருமுறை | ... | 0 25 |
| 56 | திருவாரூர் நான்மணிமாலை | ... | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"யோகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோயில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் - '63.